ஸ்ரீ:





# ஸ்ரீ காஞ்சியில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம்.

காஞ்சிமாநகர்க்கு அணிவிளக்காய் அவதரித்து விளங்கியிருந்த ஸ்ரீமத். பிரதிவாதிபயங்கரம். ஜகத்குரு காதி. அனந்தாசார்யஸ்வாமியின் அத்விதீய புத்ரரத்னமாய் விளங்கும் ஸ்ரீக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிக்கு 14-9-61 பிலவஹ ஆவணிமீ ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் முன்னடி பத்துநாள் ரிக்யஜுஸ்ஸாம வேதபாராயணங்கள், திவ்யப்ரபந்த ஸேவை, இதிஹாஸ புராணபடனம், வித்வத்ஸதஸ்ஸு, ஸ்தோத்ர பாட வீதிப்ரதக்ஷிணம் ஆகிய இவற்றுடன் இனிது நிகழ்ந்து தலைக்கட்டியது. கண்கொள்ளாக் காட்சியாக நடைபெற்றவிந்த மஹோத்ஸவத்தின் வைபவம் வாசாமகோசரம்.

ஸ்ரீராமாநுஜன்

ஸ்ரீகாஞ்சீ ஜகத்குர்வர்ய ப்ரதிவாதிபயங்கர ஶ்ரீ க்ருஷ்ணதாதாசார்யஸ்வாமி-
ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவே ப்ரதிவாதிபயங்கர அண்ணங்கராசார்யஸ்வாமி-
ஸமர்ப்யமாண நவரத்ந ஸ்தவோபஹார:॥

ஜகத்குர்வபிதாநார்த்தவத்த்வம் ஸ்ப்ருஶந்
அபி நித்யஸேவாஸம்ப்ராப்தவித்யோ ।
ததீயாபிதீயாத்தஜந்மோத்ஸவாத்து !
சிரம் ஜீவ க்ருஷ்ணார்ய வத்ஸாந்வயேந்தோ ॥

ஶ்ரீவத்ஸவம்ஶகலஶோததிகௌஸ்துபாப:
ஶ்ரீவாதிபீகரமஹாகுருவம்ஶதீப: ।
ஶ்ரீமாநநந்தகுருவர்யபதாப்ஜப்ருங்க:
ஶ்ரீக்ருஷ்ணஸூரிரநகோ ஜயதாதஜஸ்ரம் ॥

காந்தாந்தர்ஜவவித்யயா அநவத்யயா ஸாம்ப்ரத்யயா
விராஜஸே, ஜகத்குரோ: பிதாம் ஸ்வயம் பிபர்ஷி யத் ।
ஶ்ரீவாதிபாநவஸ்த்வம் யத்ர ததோऽநவதே ஸ்திய
ஶ்ரீவோ ப்ரஹ்மவித்ய ஸ்வயம் நிஜஜ்ஞதாம் பவாந்வயே ॥

ஸ்வாசாரவிஜ்ஞாபிநித்யநவ்யாத்
ப்ரவிஜாது ஸம்ஶிஷ்யாது க்ருபாவதாம் ப்ருஷ்ட்யா ।
விஶிஷ்யாநுக்ருஹ்ணாது ஸந்தோ க்ருஷ்ணஸூரே
சிரம் ஸூதயோ மஸிந்து விராஜஸ்வ கீர்த்யா ॥

கவிதார்க்கிகஸிம்ஹேதி யாஜ்யதி நிரவத்யாதி ஶாஸ்த்ரஸூத்ர
உபயத்ர மஹாந்தோ ப்ரஹ்மநவஸந்நா அபிதீயப்ரஸாதா: ।
ஸர்வம் ஸ்தாநு ஸ்வயகீர்த்யா ஹ்ருதிஶயிதாஸ்தாவகாஸ்தாதபாதா:
தேஷாம் ஸத்ஸம்ப்ரதாயம் விஜயஸி, ததிதம் தே உபீயாது ப்ரஸாத: ॥

விதந்வந்தர்ணோயவித்யாவிஜயஸம்ஸ்தோத்ரதோ பவே
விதந்வந்த்ருஷ்ய ஶிஷ்யவ்யதிருபம் வயாது வர்த்தஸே ।
வதாந்யாஜநஜ்ஞாநாது கருணயாஸம்ஜீவயது
சிரம் ஸ்ரவி விராஜதாத்கவஸ்பதா ஸம்ஸ்தித: ॥

### காஞ்சிபுரம் ஜகத்குரு பிரதிவாதிபயங்கர மடம் தலைவர்

### காதி ஸ்ரீகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியின்

# ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில்

## (14-9-61 பிலவ௵ ஆவணி ஸ்வாதி)

ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் அன்பளிப்பான

## வாழ்த்துப் பாமாலை.

நங்குலவிளக்காய் நானிலத்தெங்கும் நற்புகழ்நனியுற வாழ்ந்த
சிங்கமா மனந்தசூரியின் சேயே! சீரியகிட்டணகுருவே!
எங்கணுநின்றன் எழில்புகழோங்கி யிலகுமாகண் டுவந்திடுவோம்
இங்ஙனே மீண்டு மெழில்விழவோங்க எம்பிரானடியிறைஞ்சிடுதும்.

செகமெலாம் புகழும் செககுருப் பெரியார்செய்தவப்பயனும் சீர்மையனே
உகமெலா முகினு முலப்பிலாப் பெருமை உந்தையா ரொருவர்க் குற்றதுகாண்
நிகரிலா துலகில் நீடிரும்புகழால் நிலவுமப்பெரியார் நீள்பெயரை
அகமகிழ்ந்துலக மனுதினம் போற்றுமாறுசெய்திடுவாய் வாழியரோ.

பாருலகுய்யப் பார்த்தனார்தேரில் பாகனா யூர்ந்தருள்பரமன்
கார்முகிலுருவக் கண்ணனார்நாமம் கண்டதே நின்றனக்குளதாய்
சீர்மிகு சிறப்பு மெளிமையாங்குணமும் சிக்கனச் சேர்ந்தமை நின்பால்
பாரெலாம் பாங்காய்ப் பார்த்துளங் குளிரப் பாரினில் வீற்றிரு பலநாள்.

உயர்குலத்துதித்தோய் உயர்கலைகற்றோய் உந்தையின்வழி வழுவாதோய்!
மயர்வறு மதியோய் மந்திரமுரைப்போய் மந்திரப்பொருளுமீந்திடுவோய்!
துயர்மிகுமுலகில் தூயவாழ்வுறுவோய் தூய்மையேவடிவெடுத் திருப்போய்!
அயர்வறு வாதிபீகரண்ணல் அடிபணிந்துய்யு மன்புடையோய்!

அறிவினால்குறைவில் லாததோ ருலகம் அறிவுறப் பலபலநூல்கள்
நெறிபடும்வண்ணம் நீணிலத்தோங்க நிச்சலும் நிகழ்த்திடவேண்டிச்
சிறியதோ ரச்சியந்திரசாலை சேமமா நிறுவி நின்தாதை
நெறிபடச்செய்த நீள்பணிபோலே நீயுமஃதாற்றியுவப்பாய்.

கமலமாமாதின் குவளையொண் மலரேய் கண்களிற் காட்சியாற்கிளர்ந்தே
அமலமா விழிக்குங் கமலைநாதனருள் அனுதினமோங்குக நின்பால்
நிமலனும் நெடுமால் நிச்சலு நின்றன் நெஞ்சினில் நிறைந்துறைவதனால்
விமலமா மதியும் விபுலமாம் புகழும் வீங்குமால் வீறுபெற்றுலகில்.

# ஸ்ரீ ராமாநுஜன் 151, 152.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 13 | 1961-ஷு ஜூலை, ஆகஸ்டு-மீ<br>பிலவ-ஷு ஆடி, ஆவணி-மீ | ஸஞ்சிகை 7, 8. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 41.

கையாருஞ் சக்கரத்தோன் காதலின்றிக்கே யிருக்க*
பொய்யாகப் பேசும் புறனுரைக்கு*—மெய்யான
பேற்றை யுபகரித்த பேரருளின் தன்மைதனை*
போற்றினனே மாறன் பொலிந்து. (41)

| | | | |
|---|---|---|---|
| காதல் இன்றிக்கே இருக்க | பகவத் விஷயத்தில் அன்பு இல்லாமலிருக்கவும் | மெய் ஆன பேற்றை | உண்மையான புருஷார்த்தத்தை |
| பொய் ஆக பேசும் | கபடமாகப் பேசுகின்ற | உபகரித்த | உதவி செய்கைக் குறப்பான |
| புறன் உரைக்கு | வஞ்சக வார்த்தைகளையே பற்றாசாகக் கொண்டு, | பேர் அருளின் தன்மை தனை | மஹா கருணையின் திறத்தை |
| கை ஆரும் சக்கரத்தோன் | திருக்கையிலமர்ந்த திருவாழியை யுடையனான எம்பெருமான் | மாறன் | ஆழ்வார் |
| | | பொலிந்து போற்றினன் | திருவுள்ள உகப்புடன் சிறப்பித்துக் கூறினர். |

எம்பெருமான் தன் பக்கலில் உள்ளுருகி பக்தி செய்பவர் திறத்தில் கருணை புரிவது போலவே, உள்ளூறின பக்தியின்றிக்கே கபடமான பக்தியைச் செய்பவர் திறத்திலும் கருணை புரிவதுண்டு; இதை ஆழ்வார் தம் பக்கலிலே அநுபவ ஸித்தமாகக் கண்டாராதலால் தாம் கண்டவதனைக் *கையார் சக்கரத் திருவாய்மொழியில் எடுத்துரைத்தாராயிற்று. "கையாருஞ் சக்கரத்தோன்" என்பது 'உபகரித்த' என்பதிலே அந்வயிக்கும்.

புறனுரை—வெற்றுரை யென்றபடி. உள்ளே யில்லாமல் வெளியிலே மட்டும் சொல்லுகிற வார்த்தை. முதல் திருவந்தாதியில் (41.) "புறனுரையே யாயினும்" என்றதுங் காண்க.

கீழ் நாலாம்பத்தில் *நண்ணாதார் முறுவலிப்பவென்னும் பதிகத்திலே ஸம்ஸாரிகள் படுகிற வருத்தங்களை நினைத்து அவ்வருத்தங்கள் அவர்களுக்குத் தொலையும்படி எம்பெருமானுடைய பெருமையை யுணர்த்துவோமென்று பார்த்து அதனை யுணர்த்தினர் கீழே *ஒன்றுந் தேவு மென்கிற திருவாய்மொழியிலே. அவ்வுபதேசங் கேட்டுத் திருந்தினவர்கள்

இந்நிலத்திலே நிரம்பி யிருக்கிற படியைக் கண்ட வாழ்வார் *பொலிக பொலிக வென்று அவர்கட்கு மங்களாசாஸனம் பண்ணுவதா யிருக்குமளவிலே தம்மைப் பற்றிச் சிறிது நினைத்துக்கொண்டார்; நாமும் இவர்களைப்போலே ஸம்ஸாரத்திலே தோள் மாறிக் கிடவாதே இவர்களுக்கு உபதேசம் பண்ணும்படியாகவும் இவர்களைத் திருத்தும்படியாகவும் எம்பெருமான் நமக்கு அருள் புரிந்திருக்கின்றனே, இவ்வருளுக்கு நிதானம் ஏதேனு முண்டோ வென்று ஆராய்ந்து பார்த்தார்; அவ்வருள் நிர்ஹேதுகம் என்பதை நன்கறிந்தார். உள் குழைந்து அதனைப் பேசி யநுபவித்தார்* கையார் சக்கரத் தென்னு மிப்பதிகத்திலே.

சப்தாதி விஷயங்களிலேயே நான் மண்டிக் கிடக்க, பகவத் விஷயத்தையும் வாயாலே சொல்லுபவன்போல் பாவனை செய்தவனே யல்லது உள்கனிந்த ப்ரேமம் சிறிதுமுடையே னல்லேன்; அப்படியிருந்தும் க்ருத்ரிமமான அந்த உக்திதன்னையே பற்றுசாகக் கொண்டு எம்பெருமான் என்னை விஷயீகரித்தவாறு என்னே! என்று ஆச்சரியப்பட்டாராயிற்று. (41.)

## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 42.

போலிக போலிகவென்று பூமகள்கோன் தொண்டர்*
மலிவுதனைக் கண்டுகந்து வாழ்த்தி*—உலகில்
திருந்தாதா தம்மைத் திருத்திய மாறன்சொல்*
மருந்தாகப் போகும் மனமாசு.

| | | | |
|---|---|---|---|
| உலகில் | இவ்வுலகத்தில் | திருந்தாதார் தம்மை | திருந்தாம விருப்பவர்களை |
| பூமகள் கோன் தொண்டர் | திருமாலுக்குத் தொண்டர்களான ஸ்ரீவைஷ்ணவர்களினுடைய | திருத்திய | உபதேச முகத்தாலே திருத்தியருளின |
| மலிவு தனை கண்டு | ஸமிருத்தியைக் கண்டு | மாறன் | ஆழ்வாருடைய |
| உகந்து | உள்ளம் பூரித்து | சொல் | ஸ்ரீ ஸூக்திகளே |
| பொலிக பொலிக என்று வாழ்த்தி | வாழ்க வாழ்கவென்று மங்களாசாஸனம் பண்ணி (அவ்வளவோடும் நில்லாமல்) | மருந்து ஆக | மருந்தாகப் பெற்று |
| | | மனம் மாசு போகும். | மனக் களங்கம் தொலைந்திடும். |

கீழே (நாலாம் பத்தில்) *நண்ணுதார் முறுவலிப்பவிலே *கொடுவுலகம் காட்டேலே யென்ற ஆழ்வார்க்கு இந்நிலத்தில் இருப்பு ஒருவாறு போக்யமாகைக்காக எம்பெருமான் ஸ்ரீவைஷ்ணவத் திரள் மலிந்திருக்கும்படியை இங்கே காட்டிக் கொடுக்க, அது கண்டு *பொலிக பொலிகவென்று போற்றியும், இன்னமும் திருந்தாத ஸம்ஸாரிகளை உபதேசங்களாலே திருத்தியும் அவர் பணித்த அருளிச் செயலே நமது மனனக மலங்கள் கழிய அருமருந்து என்றதாயிற்று.

இவ்விபூதியி லுண்டான ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்திக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறது *பொலிக பொலிக பொலிகவென்னுந் திருவாய்மொழி. இப்போது இந்த மங்களாசாஸனத்திற்கு ப்ரஸக்தி ஏதென்னில்; கீழே நாலாம் பத்தில் *நண்ணுதார் முறுவலிப்பவென்னும் பதிகத்திலே ஆழ்வார் ஸம்ஸாரிகளின் க்லேசங்களை யநுஸந்தித்து அதற்குப் பரிஹாரமாக *ஒன்றுந் தேவுமென்கிற (4—10) பதிகத்திலே எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பரக்கப் பேசிவைக்க. அதனாலே திருந்தி ஸம்ஸாரம் பரமபதம் என்கிற வேற்றுமையற்று அங்குள்ளாரும் இங்கே வரலாம்படி யிருக்கு மிருப்பைக் கண்டு மங்களாசாஸனம் பண்ணுகிறாராயிற்று.

*ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயைக் காண்பதற்காக நித்யஸூரிகள் நித்ய விபூதியில் நின்றும் இந்நிலத்திலே யெழுந்தருள, அவர்களுக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறாரென்றும் சில ஆசாரியர்கள் நிர்வஹிப்பர்களாம். ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயாவது—ஆழ்வாருடைய உபதேசம் கேட்டுத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸம்ருத்தியாகிற ஸ்ரீயாம். இந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே ஸாக்ஷாத்தாக மங்களாசாஸனம் செய்வதாக ஒரு நிர்வாஹம். இந்த ஸ்ரீ வைஷ்ணவர்களைக் காண்கைக்காக லோகாந்தரத்தில் நின்றும் வந்தவர்கட்கு மங்களாசாஸனம் செய்வதாக மற்றொரு நிர்வாஹம். ஆசார்ய ஹ்ருதயத்தில் "அடிமை புக்காரையும் ஆட்செய்வாரையுங் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு" என்றருளிச் செய்ததும், அவ்விடத்து மணவாள மாமுனிகளின் வியாக்கியானமும் இங்கு அநுஸந்தேயம்.* ... .... (42.)

---

# உபய வேதாந்த மணித் திரள்கள்.

(ப்ர—அ.)

*வடமொழி வேதாந்தத்திலிருந்தும் தென் மொழி வேதாந்தத்தி லிருந்தும் மாறி மாறிச் சில மணித் திரள்களை யெடுத்துக் காட்டியநுபவிப்போம்.*

## — வடமொழி வேதாந்த மணி —

"ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்." [𑌸𑌦𑍇𑌵 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍]

"அஸத்வா இதமக்ர ஆஸீத்." [𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍]

*வெவ்வேறு உபநிஷத்துக்களில் இவ்விரண்டு வாக்கியங்களைக் காண்கிறோம். முன்னே ஸத்துதான் இருந்ததென்று முந்தின வாக்கியம் கூறுகின்றது. முன்னே அஸத்துதானிருந்ததென்று பிந்தின வாக்கியம் கூறுகின்றது. (ஸத்) என்பதற்கு உள்ள பொருள் என்று அர்த்தம்; (அஸத்) என்பதற்கு இல்லாத பொருள் என்று அர்த்தம். இல்லாத பொருள் இருந்ததென்றால் இது எப்படி பொருந்தும்? 'மலடி மகனிருந்தான், ஆகாசத் தாமரை யிருந்தது, முயற்கொம்பு இருந்தது' என்னுமாபோலே யன்றோ 'இல்லாத பொருள் இருந்தது' என்கிற இவ்வார்த்தையும். இதை எப்படிப் பொருந்த விடுகிறது? என்று கேள்வி யுண்டாகக் கூடியது.*

*இதற்கு ஒருவிதமாக ஸமாதானம் கூற முன்வரலாம். 'இல்லாத பொருள்தான் முன்னே யிருந்தது' என்பதாக இவ்வாக்கியத்திற்கு அர்த்தமன்று; "𑌇𑌦𑌮𑌗𑍍𑌰𑍇 𑌅𑌸𑌤𑍍 𑌆𑌸𑍀𑌤𑍍—இதம் அக்ரே அஸத் ஆஸீத்" என்று யோஜித்து, 'இப்போது காணப்படுகிற இந்த விஸ்தீர்ணமான பிரபஞ்சமெல்லாம் முன்பு சூந்யமாகவே யிருந்தது' என்பதாக அர்த்தம் கொண்டால் பொருந்தாமை யொன்றுமில்லை. ஒன்றுமே யில்லாததாக நாம் நெடுநாள் பார்த்தவிடங்களில் கொடி செடி மரங்கள் முளைப்பதும், பெருப் பெருத்த வீடுகள் கட்டப்படுவதும் காண்பதனால் "இதம் அக்ரே அஸத் ஆஸீத்" என்பதில் குறையில்லை யென்று சொல்லிவிடலாம்.*

ஆனாலும், நம்முடைய ஸித்தாந்தத்தில் ஸத், அஸத் என்னுஞ் சொற்களின் பொருளை உள்ளபடி உணரவேண்டும். "𑌸𑌦𑍇𑌵 𑌨𑍀𑌯𑌤𑍇 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌂 𑌅𑌸𑌤𑌸𑍍 𑌸𑌮𑍍𑌭𑌵𑌃 𑌕𑍁𑌤𑌃? — ஸதேவ நீயதே வ்யக்திம் அஸதஸ் ஸம்பவ: குத:" என்பது நமது ஸித்தாந்தத்தின் ஸாரமான வார்த்தை. இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளக்கூடிய தென்னவென்றால், ஸத் என்கிற சொல்லுக்கு ஸ்தூலமான பொருள் என்று அர்த்தம்; அஸத் என்கிற சொல்லுக்கு ஸூக்ஷ்மமான பொருள் என்று அர்த்தம். ஸூக்ஷ்மாகாரத்தை யுடையதாயிருந்த வஸ்து ஸ்தூலாகாரத்தை யடைகின்றது. இதைத் தான் உத்பத்தியென்று சொல்லுகிறோம். ஸ்தூலாகாரத்தை விட்டு ஸூக்ஷ்மாகாரத்தை யடைந்துவிட்டால் அதைத்தான் விநாசமென்கிறோம்.

வடமொழியில் பஞ்சதா என்று மரணத்திற்குப் பெயர் வைக்கப்பட்டிருக்கின்றது. இதன் மருமம் என்னவென்பதை உய்த்துணர வேணும். கேண்மின்; நம்முடைய வுடல் ஐந்து பொருள்களா லாக்கப்பட்டது. *மண்ணும் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணா ராக்கை* என்றும் *மஞ்சு சேர் வானெரி நீர் நிலம் காலிவை மயங்கிநின்ற அஞ்சு சேராக்கை* என்றுமுள்ள திருமங்கையாழ்வா ரருளிச் செயலின்படி நிலம் நீர் தீ கால் விசும்பாகிய பஞ்சபூதங்கள் ஒன்று சேர்ந்து சரீரமென வழங்கப்படுகின்றது. ஸூக்ஷ்மாவஸ்தையிலிருந்த பஞ்ச பூதங்கள் ஸ்தூலாவஸ்தையை யடைந்தால் அதுதான் பிறப்பென்றும் ஜன்மமென்றும் சொல்லப்படுகின்ற தென்றதாயிற்று. இனி மரணமென்பது யாதெனில், இதுவரை ஸ்தூலாவஸ்தையை யடைந்திருந்த பஞ்ச பூதங்கள் அவ்வவஸ்தையை விட்டு மீண்டும் ஸூக்ஷ்மாவஸ்தையை பஜிப்பதுதான் மரணமெனப்படுகின்றது. ஐந்து பூதங்களும் ஒன்று சேர்ந்திருந்த நிலைமை மாறி ஐந்தாகப் பிரியலுற்ற நிலைமையே மரணமென்றதேறிற்று. இதை யிட்டே மரணத்தைப் பஞ்சதா என்று வழங்குகின்றனர் வடமொழியாளர்.

இதனால் நாம் தெரிந்து கொண்டது என்ன? இல்லாததொரு வஸ்து உண்டாவதுமில்லை; உள்ளதொரு வஸ்து அழிந்து போவதுமில்லை. ஓரவஸ்தையை விட்டு மற்றோரவஸ்தையை யடைவதுதான் உத்பத்தி யென்றும் விநாசமென்றும் வழங்கப் பெறுகின்றது. பஞ்ச பூதங்களுக்கு ஸ்தூலாவஸ்தையும் ஸூக்ஷ்மாவஸ்தையும் மாறி மாறி வருகின்றன. ஸ்தூலாவஸ்தையி லிருக்கும்போது ஸத்து எனப்படுகின்றது. ஸூக்ஷ்மாவஸ்தையில் சேரும்போது அஸத்தெனப்படுகின்றது.

பகவத்கீதை இரண்டா மத்யாயத்தில் — "𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌹𑌿 𑌧𑍍𑌰𑍁𑌵𑍋 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌮𑍃𑌤𑌸𑍍𑌯 𑌚 — ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு: த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" என்றொரு ச்லோகமுள்ளது. இதில் பிறக்கிற வஸ்துக்களுக்கெல்லாம் ம்ருத்யு நிச்சயமென்றும், ம்ருத்யுவை யடைந்த வஸ்துக்களுக்கெல்லாம் பிறப்பு நிச்சயமென்றும் சொல்லப்படுகிறது. இங்கே சிலர் சங்கிப்பதுண்டு; பிறக்கிற வஸ்துக்களுக்கெல்லாம் ம்ருத்யு நிச்சயமென்றால் இது பொருத்தமே; ம்ருத்யுவை யடைந்த வஸ்துக்களுக்கெல்லாம் பிறப்பு நிச்சயமென்றால் இது பொருந்துமோ? அந்த பகவத் கீதையிலேயே சில அதிகாரிகளைப் பற்றிச் சொல்லும்போது "த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!" என்று புநர் ஜன்ம மில்லையாகச் சொல்லப்படுகிறதன்றோ. "மாமுபேத்ய து கௌந்தேய புநர் ஜந்ம ந வித்யதே" என்றும் சொல்லப்பட்டுள்ளதன்றோ. ஆகவே கீழே யெடுத்துக் காட்டிய கீதா ச்லோகத்தில் "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" என்று சொல்லியிருப்பது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கை யேற்படுகிறது.

இது ஸர்வாத்மநா அஸ்தாநே ஶங்கையாகும். ஜாதம் என்கிற ஶப்தத்தினால் விவக்ஷிதமான வஸ்து எது? ம்ருதம் என்கிற ஶப்தத்தினால் விவக்ஷிதமான வஸ்து எது? என்று ஆராய்ந்துணர்ந்தால் இந்த ஶங்கை யுதிக்க ப்ரஸக்தியே யிராது. ஆத்மாவுக்கு ஜன்மமுமில்லை மரணமுமில்லை. அது ஸ்வரூபதோ நித்யமான வஸ்து. ஜன்ம மரணங்கள் சரீரத்திற்கே யுண்டாவன. ஆகவே ஜன்ம மடைந்த தேஹம் நசிப்பதும், நசித்த தேஹம் மீண்டும் ஜன்மமடைவதும் ஸம்பாவிதமே யொழிய அஸம்பாவிதமன்று. ஒருகால் ஸத்து எனப்பட்டு மற்றொருகால் அஸத் தெனப்படுவது ஸதத விகார ஶீலமான அசித்துக்கே யாதலால் "ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:" என்றதும் "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" என்றதும் எளிதாகப் பொருந்துமென்க.

இந்த ப்ரஸ்தாவத்தில் "[illegible]" என்கிற தைத்திரீயோப நிஷத் வாக்யம் நினைவுக்கு வந்து ஶங்கையு முண்டாகும்; அதைப்பற்றி அடுத்த இதழிற் பேசுவோம்.

## 2. தமிழ் வேதாந்த மணியொன்று.

(மடலூர்வதைப் பற்றி.)

நம்மாழ்வார் திருவாய்மொழியில் ஐந்தாம் பத்தில், *மாசறு சோதியென்னும் மூன்றும் பதிகத்தில் "குதிரியாய் மடலூர்துமே" என்றும், "யாம் மடலூர்ந்தும்" என்றும் இருமுறை மடலூர்வதைப் பற்றி ப்ரஸ்தாவித்தார். *மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூற அவதரித்தவரான மங்கையர்கோன் சிறிய திருமடலென்றும் பெரிய திருமடலென்றும் இரண்டு திவ்வியப் பிரபந்தங்களை யருளிச் செய்தார். நம்மாழ்வார் மடலூர்தல் என்னும் சொல்லை இருமுறை உச்சரித்ததற்காகத் திருமங்கை மன்னன் இரண்டு மடற் பிரபந்தங்களைப் பேசினாராயிற்று. அவற்றுள், பெரிய திருமடலில்,

> "மானோக்கி னன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
> மன்னு மடலூரா ரென்பதோர் வாசகமும்
> தென்னுரையில் கேட்டறிவ துண்டு, அதனையாம் தெளியோம்
> மன்னும் வடநெறியே வேண்டினோம்."

என்று கூறப்பட்டுள்ளது. ஸ்த்ரீகள் புருஷர்களை நோக்கி மடலூரக் கூடாதென்று தென் மொழியாளர்கள் மறுத்திருந்தாலும் அதனை நாம் பொருள்படுத்துவோ மல்லோம்; வடமொழியாளர்கள் மடலூர்வதை அனுமதித்திருப்பதால் நாம் அதைப் பின்பற்றுகிறோம்— என்றாராயிற்று. ஆழ்வார் இப்போது பெண்பாவனை கொண்டிருப்பதால் "மானோக்கி னன்ன நடையார்" என்றதற்குப் பொருத்தமிருப்பதாகக் கொள்வோம்; "மன்னும் வட நெறியே வேண்டினோம்" என்கிறாரே; இதற்குப் பொருத்தமேது? வட நூல்களில் மடலூர்வதைப் பற்றின பேச்சே கிடையாதன்றோ. வடமொழிப் புலவர்களை நோக்கி "மடலூர்வதைப் பற்றி ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில் என்ன கூறப்பட்டுள்ளது?" என்று கேட்டால் "மடலூர்வதென்கிற சொல்லே எங்கள் காதில் விழுந்தது கிடையாதே; இதற்கு ஸம்ஸ்க்ருத பதம் இன்னதென்றே எமக்குத் தெரியாதே" என்றுதான் அவர்கள் விடை தருவார்கள்.

உண்மையே யிது; இப்படி யிருக்க, ஆழ்வார் "தென்னுரையில் கேட்டறிவதுண்டு, அதனை யாம் தெளியோம் மன்னும் வடநெறியே வேண்டினோம்" என்றருளிச் செய்தது எது கொண்டு? என்று விமர்சிக்க ப்ராப்தமாகிறது.

இங்குத் தேறுவதைத் தெரிவிக்கிறோம். "மன்னும் வடநெறியே வேண்டினோம்" என்றருளிச் செய்த ஆழ்வார் தாமே அடுத்தபடியாக விவரித்துள்ளார். ஸ்ரீராமாயண மஹாபாரதாதிகளிலிருந்து ஸீதா பிராட்டி முதலான சில பெண்மணிகளின் சரிதைகளை யெடுத்துக் காட்டியுள்ளார். "போர்வேந்தன் தன்னுடைய தாதை பணியா லரசொழிந்து" என்று தொடங்கி "பன்னி யுரைக்குங்காற் பாரதமாம்" என்னுமளவாகக் கண்டு கொள்வது. வடமொழியிலுள்ள இதிஹாஸ புராண நூல்களி லமைந்த சில ஸதீமணி சரித்திரங்களை யெடுத்துக் காட்டியருளினது 'இவர்கள் மடலூர்ந்தவர்கள்' என்று காட்டினபடியாயிற்று. இதிஹாஸ புராண ப்ரவசனம் செய்பவர்களில் எவரும் ஸீதாபிராட்டி முதலானவர்களை மடலூர்ந்தவர்களாகப் பேசுவது கிடையாது. மடலூருதல் என்கிற சொல்லே அவர்களுக்குத் தெரியாதன்றோ. ஆழ்வார் திருவுள்ளம் இங்கு யாதெனில்; மடலூர்வதென்கிற செய்கையைத் தமிழர்கள் கொண்டிருக்கிற விதம் வேறு; ஆழ்வார்கள் அந்த ரீதியை ஆதரித்தவர்களல்லர். அத்யந்த பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூப விஶேஷத்தைக் கைவிடாது காப்பாற்ற வேண்டியிருந்தும் அதனை யுபேக்ஷித்து, தங்களுடைய அளவு கடந்த அபிநிவேஶ விஶேஷத்தை யொளித்திடாமல் காட்டிக் கொள்வதும் அதி ப்ரவ்ருத்தி செய்வதுமாகிற இவ்வளவே மடலூர்வதாக ஆழ்வார்களுக்கு விவக்ஷிதம். இதுதான் (பெரிய திருமடலில்) எடுத்துக் காட்டியருளின ஸீதாபிராட்டி முதலானார் சரிதைகளிலிருந்து விளங்குவது.

முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத் தொடக்கத்தில் "புறம்புண்டான பற்றுக்களை யடைய வாஸனையோடே விடுகையும்..........பரம ஸாத்விகரோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்" என்றருளிச் செய்யப்பட்டுள்ள பெரிய சூர்ணையில் "பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும்" என்று இரண்டு கூறப்பட்டுள்ளன. அங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியான பங்க்திகள் இவை ;—

"பேறு தப்பாதென்று துணிந்திருக்கையாவது—உபாயஸௌகர்யமும் உத்தேச்யதௌர்லப்யமும் ஸ்வகீய தோஷபூயஸ்த்வமு மடியாக வரும் ஶங்காத்ரயமுமின்றிக்கே பலம் தப்பாமல் ஸித்திக்குமென்று விச்வஸித்திருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது–இப்படி விச்வஸித்து 'பேறு ஸித்தித்த போது காண்கிறோம்' என்றிருக்கை யன்றிக்கே *மாக வைகுந்தம் காண்பதற்கென் மனம் ஏகமெண்ணும்* தாவி வையங் கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக் கொள்ளுங் கால மின்னங் குறுகாதோ* என்கிறபடியே க்ரம ப்ராப்தி பற்றாமல் பதறுகை. ஆக இவையிரண்டாலும் உபாயோபேயாதிகாராபேக்ஷிதங்களான மஹா விச்வாஸத்தையும் ப்ராப்யத்வரையையும் சொல்லுகிறது." என்று.

இதனால் என்ன தெரிவிக்கப்படுகிறதென்றால் உபாயாதிகாரத்தின் தலையிலே நிற்கிற மஹா விச்வாஸமும், உபேயாதிகாரத்தின் தலையிலே நிற்கிற ப்ராப்யத்வரையும் பரஸ்பர விருத்தங்க ளல்லவென்றும் ஸ்வரூபாநுரூபமானவையே யென்றும் தெரிவிக்கப்படுகிறது.

ஸ்ரீவசந பூஷணத்தில்—

"அநந்யோபாயத்வமும் அநந்யோபேயத்வமும் அநந்ய தைவத்வமும் குலையும்படியான ப்ரவ்ருத்தி காணு நின்றோமிறே. ஜ்ஞாந விபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவை யெல்லாம் அடிக் கழஞ்சு பெறும்."

என்றுள்ள இரண்டு சூர்ணைகளும் மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தோடுங்கூட இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

ஆழ்வாருடைய மடலூர்தலில் ஒரு மருமம் உணரத் தக்கதுண்டு; சிறிய பெரிய திருமடல்களிரண்டிலும் "மடலூர்வன், மடலூர்வன்" என்றுள்ளதேயன்றி மடலூர்ந்த செய்தி கிடையாது. இதனை "அச்சமுறுத்திக் காரியங் கொள்ளப் பார்க்கை" என்பர் ஆன்றோர். திருநெடுந்தாண்டகத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யும் பெரியவாச்சான் பிள்ளை அவ்விடத்து அவதாரிகையை மிக விரிவாக இட்டருளியுள்ளார். இது சரமப் பிரபந்த மாகையாலே கீழ்ச் சென்ற ஐந்து பிரபந்தங்களுக்கும் உத்தரோத்தர ஸங்கதி யருளிச் செய்கையில், திருவெழுகூற்றிருக்கைக்கு அடுத்தபடியாகத் திருமடல்கள் அவதரித்ததற்கு ஸங்கதியிட்டிருப்பது மிகவினிது. அதன் ஸாரம் வருமாறு;— "நின்னடியிணை பணிவன் வருமிடரகல மாற்றோ வினையே" என்று ஆர்த்தராய்ச் சரணம் புகுந்தார் திருவெழுகூற்றிருக்கையிலே; அப்போதும் எம்பெருமான் இவருடைய அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டிற்றிலன்; நம்போலியரை வாழ்விக்க இவ்வாழ்வார் முகமாக இன்னுஞ் சில திவ்யப் பிரபந்தங்களை வெளியிட வேணுமென்னு மவாவினால் வாளாவிருந்திட்டான். சக்ரவர்த்தி திருமகன் ஸமுத்ரராஜனைச் சரணம் புகுந்து வழிவிடுமாறு வேண்டினவிடத்தும் அக்கடலரையன் முகங்காட்டாதிருக்க, பெருமாள் சீறிச் சிவந்த கண்ணினராய் "ஸாகரம் சோஷயிஷ்யாமி—சாபமாநய ஸௌமித்ரே—பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா:" என்று, இதோ இக்கடலை வற்றச் செய்துவிடப் போகிறேன்; லக்ஷ்மணா! வில்லையும் அம்புகளையும் கொண்டு வா; வானர முதலிகள் காலாலே நடந்து செல்லட்டும், ஒரு க்ஷணத்திலே இக்கடல் படுகிற பாடு பாராய்—என்றருளிச் செய்து ஸமுத்ரராஜனை அழிக்க முயன்றாப்போலே இவ்வாழ்வாரும் 'நமது அபேக்ஷிதத்தை நிறைவேற்றாத எம்பெருமான் எதுக்கு? அவனுடைய ஸ்வரூப குண விபூதிகளையும் அவன் உகந்து எழுந்தருளி யிருக்கு மிடங்களையும் அழித்துவிடுவோம' என்று அவற்றை யழிக்கப் பார்த்தார் திருமடல்களில்—என்பதாக.

இன்னமும், மடலூர்வதன் மருமத்தைப் பற்றி நம்முடைய திருமடல் திவ்யார்த்த தீபிகையில் விரிய வுரைக்கப் பட்டிருப்பதுங் காண்க.

---

## நமது வடநாட்டுத் திருப்பதி யாத்திரையின் விசேஷங்கள்.

நமது ப்ராண நிர்விசேஷர்களான ஆப்தர்கள் தமிழ் நாட்டில் எண்ணிறந்துள்ளார்கள். அவர்களுக்குத் தனித் தனியே கடிதங்களெழுத முடியாமல் இந்த வியாஸம் சுருக்கமாக எழுதலாகிறது. 9—7—61ல் தொடங்கிய நமது யாத்திரை ஆகஸ்டு மாத முடிவோடு முடிவடைந்தது. நாம் வடநாட்டுத் திருப்பதி யாத்திரை புறப்படும் போதெல்லாம் முன்னடியே ஸ்ரீராமாநுஜனிலும் அம்ருதலஹரியிலும் தெலுங்கு ஸம்ஸ்க்ருத பத்ரிகைகளிலும்

பிரசுரம் செய்வதும், விசேஷித்துச் சில ஆப்தர்களுக்கு விண்ணப்பங்கள் மூலமாகத் தெரிவிப்பதும் வழக்கம். இந்த விசை ஒருவிதமான ஸூசனமுமில்லாமல் புறப்பட நேர்ந்தபடியால் நூற்றுக்கணக்கான ஆப்தர்கள் விஸ்மயத்துடன் ஸ்ரீமுகங்கள் ஸாதிக்க ப்ராப்தமாயிற்று.

கோவையில் வாழும் ஸ்ரீமத் உபய வேதாந்த வித்வன் மணி. வேதவியாஸ பட்டர் திருமலை யையங்கார் ஸ்வாமி நம்முடைய யாத்திரைகளில் பெரும்பாலும் ஸஹயோக மளித்து அமந்தாநந்த ஸந்தோஹ நிஷ்யந்த நிதான பூதரா யிருந்தவ ரென்பதை அறியாதாரில்லை. அந்த ஸ்வாமியின் ஸஹயோகமின்றி நமக்கும் யாத்திரை ரஸிப்பதில்லை. இப்படி யிருந்தும் அந்த ஸ்வாமிக்கும் தெரிவித்துக் கொள்ளாமல் ப்ரக்ருத யாத்திரை புறப்பட நேர்ந்தது. அதனால் அந்த ஸ்வாமியின் திருவுள்ளம் மிகவும் புண்பட்டு நொந்ததென்பதை வழியிடையில் கிடைத்த அந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தினா லறிந்து மிகத் தளர்ந்தேன். நேற்று வைகாசித் திருவிசாகத்தன்று அந்த ஸ்வாமி ஸ்வஸ்தானத்தில் பகவத் விஷய ப்ரவசநம் ப்ராரம்பித்ததாகவும் அந்த கோஷ்டியில் பலர் அந்வயித்துக் களித்து வருவதாகவும் ஏற்கெனவே தெரிந்திருந்தபடியால் அந்த திவ்யாநுபவத்திற்குத் தண்ணீர்த் துரும்பாக நாம் இந்த யாத்திரையைத் தெரிவிக்க லாகாதென்று நினைத்தே அந்த ஸ்வாமிக்குத் தெரிவித்திலோம். இந்த மஹாபராதத்தை அந்த ஸ்வாமி ஸஹஜ கருணையுடன் க்ஷமித்தருள வேணுமத்தனை.

தென்னாட்டுத் திருப்பதி யாத்திரை தென்திசையினர்க்கு எளிதாகக் கிடைக்கக் கூடியது. அதனை அடியேன் நாற்பது பிராயத்தளவும் பலகால் செய்து க்ருதார்த்தனாயிருக்கிறேன். வடநாட்டுத் திருப்பதி யாத்திரையில் அடியேனுடைய அவா அபரிமிதமானது. உஜ்ஜயிநீ, வடமதுரை, ஹரித்வாரம், ஹ்ருஷீகேசம், அயோத்யை, த்வாரகைகள், பஞ்சவடி முதலான ஸ்தல விசேஷங்களை நினைத்துக் கொள்ளும்போது நம்முடைய வாழ்நாளை யெல்லாம் அந்த ஸ்தல விசேஷங்களிலேயே கழித்து விடலாமா? என்று தோன்றுவது வழக்கம். காஞ்சீபுரியில் வேகவதீ நதி ஸந்நிஹிதமாயிருந்தும் அது வந்த்ய நதியென்றும் சுஷ்க நதியென்றும் பேர் பெற்றிருக்கின்றதே யென்கிற வருத்தம் அடியேனுக்குப் பெரிதுமுண்டு. அதனால் நித்ய ப்ரவாஹ நதீ தீர வாழ்ச்சியில் மிகுந்த ஆவலுடையேன். மேலே குறித்த வடநாட்டு க்ஷேத்திரங்களிலும் மற்றுமுள்ள எந்த ஸ்தலங்களிலும் அடியேனுக்குக் கிடைக்கும் வஸதிகள் தேவேந்திர பவனமென்றே சொல்லத்தகும். இதைப் பற்றிப் பல நூல்களில் விவரித்துமிருக்கிறேன். எங்குச் சென்றாலும் "இடறி விழுந்தால் நதியில்தான் விழவேண்டும்" என்னும்படியான வஸதிகளே அடியேனுக்குக் கிடைத்து வருவது நாற்பது வருஷத்து அநுபவ ஸித்தமாதலால் எங்கிருந்தாலும் இந்த ஸ்தலங்களின் நினைவு இடையறாது அநுவர்த்தித்துக் கொண்டே யிருக்கும். அதனால் இரண்டு வருடங்களுக்கு ஒருமுறையாவது புறப்பட்டு இரண்டொரு மாதம் வடநாட்டு க்ஷேத்ர தீர்த்தங்களில் ஸஞ்சாரம் செய்தாலல்லது ஆத்ம த்ருப்தி அமைவதில்லை.

இந்த வருஷத்தில் எந்த ஸ்தலத்திற்கும் செல்லாமல் ஹரித்வாரத்தில் மட்டும் ஒரு மாதம் ஏகாந்தவாஸம் செய்து திரும்ப வேணுமென்கிற அவா அதிகரித்திருந்தது. "அந்யோ ஹ்யயந்யச் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம் யஹம்" என்பதன்றோ பகவானுடைய வார்த்தை. முதலில் ஆந்திர மண்டலியில் சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கிணங்கி நெல்லூர், க்ருஷ்ணா, கோதாவரீ ப்ராந்தங்களில் மோடர்கார் ஸஞ்சாரம் செய்ய நேர்ந்தது. அசிந்திதமாக ஸ்ரீஜகந்நாத ஸேவை ஸம்ப்ராப்தமாயிற்று. அங்கிருந்து நேராக ஹரித்வாரம் சேரவேணு

மென்றிருக்கையில் டில்லிமா நகரில் வாழும் பரமாப்தர்களான மஹான்களின் அன்பார்ந்த ஆஹ்வான பத்ரிகை கிடைத்ததனல் அவ்விடம் செல்ல ஆவச்யகதை விளைந்தது. 13—8—61. திருவாடிப்பூரம் முதலாக ஒரு வாரம் புதுடில்லியில் தங்கியிருக்க வேண்டியதான நிர்ப்பந்தம் நேரிட்டது. அதற்குமுன் பத்து நாள் அவகாஶமிருந்தபடியால் முன்னம் உஜ்ஜயினி சென்று சேரலாயிற்று. ஆயுள்வரை தங்கியிருந்தாலும் த்ருப்தி பெறமாட்டாத இத்தலத்தில் மூன்று நாள் மட்டுமே தங்கியிருக்க நேர்ந்தது. இங்கு ஶிப்ரா நதி பெருகு மழகும் அதன் வாசலில் பரமபவித்திரமான ராமாநுஜகூடம் அமைந்திருக்கு மழகும் வாசா மகோசரம். இவ்விடத்தில் நரஸிம்ஹ மந்திரமென்கிற வொரு பெரிய ஸன்னிதியில் மூன்று நாள் நம்முடைய ப்ரவசநம் ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒரு நாள் ஸம்ஸ்க்ருதத்திலும், இரண்டு நாள் ஹிந்தியிலும் முறையே ப்ரஹ்லாத ப்ரபாவம், நரஸிம்ஹ வைபவம், பக்தியின் தத்துவம் என்பவைபற்றி உபந்யாஸங்கள் நிகழ்ந்தன.

இத்தலத்தில் ஸாந்தீபனி முனிவரின் ஆச்ரமம் மிக முக்கியமாக ஸேவிக்கத்தக்க தன்றோ. ஸ்ரீ க்ருஷ்ணபகவான் பலராமனோடும் குசேல முனிவரோடும் அறுபத்துநான்கு நாட்களில் அறுபத்து நான்கு கலைகளையும் பயின்றது இத்தலத்தில் ஸாந்தீபநி முனிவரிடத்தி லென்று இதிஹாஸ புராணங்கள் கூறும். சிலவாண்டுகட்கு முன்பு ஸ்ரீஸ்ரீ. ராஷ்ட்ரபதி. ராஜேந்திர ப்ரஸாத் அவர்கள் இத்தலத்தில் விஜயஞ் செய்து ஸாந்தீபநி யாச்ரமத்தின் மஹிமையை யுணர்ந்து இவ்வாச்ரமத்தைப் பெரிய ஸம்ஸ்க்ருத வித்யாபீடமாக அமைக்க வேணுமென்று கட்டளையிட்டு அதற்குப் பர்யாப்தமான த்ரவ்ய ராசியையும் ஸாங்க்ஷன் செய்ததனல் இப்போது தந்நிர்மாணம் நடைபெற்று வருவதை யறிந்து பரமானந்த மடைந்தோம்.

இங்கிருந்து மதுரை ப்ருந்தாவனம் போக நினைத்தோம். மறுநாளில் அஸ்மத் குல கூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவின் திருவவதார நன்னாள் திருவாடிப் புஷ்யம் நேர்ந்தபடியால் அத்திரு நன்னாள் கொண்டாட்டத்தை ப்ரதிவாதி பயங்கர பீடம் விளங்கும் இந்தோர் மகா நகர ஸன்னிதியில் நிகழ்த்த விரும்பி உஜ்ஜயினிக்கு ஸந்நிஹிதமான அந்நகர்க்குச் சென்றோம். அங்கு யசவந்த கஞ்ஜ் என்னுமிடத்தில் தாக்ஷிணாத்ய ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடமான விலக்ஷண ஸன்னிதி யொன்று ஒரு நூற்றாண்டாக விளங்கி வருகின்றது. இந்த ஸன்னிதியை ராமாநுஜ கூடமென்று அவ்விடத்தார் வழங்கி வருவர்கள். அப்படியே அதற்கு ப்ரஸித்தியாய் விட்டது. ஸன்னிதியின் ஸந்நிவேஶம் மிகவும் ரமணீயமானது. இங்கே ப்ரதிவாதி பயங்கர வம்ஶஸ்த குடும்பமொன்று நியதவாஸம் செய்துகொண்டு ஸந்நிதி பரிபாலனம் செய்து வருகின்றது. இவ்விடத்தில் ஆசார்ய திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனர் சிறப்பாக நடத்தப்பட்டு, இங்கிருந்து வடமதுரைக்குப் புறப்படவிருக்கையில் ஒரு யஜ்ஞ ஸந்தர்ஶநார்த்தமாக ஆஹ்வானம் கிடைத்தது அவ்விடத்திலேயே.

அங்கு மஹா தனிகரான ஒரு ஸேட் பல லக்ஷ ரூபாய்ச் செலவில் மிகப் பெரிய தர்மசாலையொன்று நிர்மாணம் செய்வித்திருந்தார். அதன் திறப்பு விழாவுக்குப் பூர்வாங்கமாக யஜ்ஞமொன்று நடத்தினர். வடநாட்டில் ஸ்ரீமத் பாகவதத்திற்கு அபரிமிதமான ஆதிக்யமாதலால் நூற்றெட்டு பண்டிதர்களை வரவழைத்து ஸ்ரீமத் பாகவத பாராயணம் செய்வித்தல் இந்த யஜ்ஞத்தில் பிரதானமான க்ருத்யமாம். அவ்விடத்திற்கு வந்து யஜ்ஞத்தின் பெருமையைப் பற்றி ஓர் உபந்யாஸம் செய்யவேணுமென்று அன்பர்கள் வேண்டிக் கொண்டதனல் அங்குச் செல்ல நேர்ந்தது. வெறும் பௌராணிகர்களன்றிக்கே நூற்றெண்மரும் சிறந்த பண்டிதர்களாகவே சேர்ந்திருந்தனர். அன்னவர்களிடையே "அதஹி ஶ்ரு அதஹி ஶ்ரு ஶாஸ்த்ராம் வஞ்ஹிரெவ அ! ஹயதெ அ வநஅஶாஸ்த்ராம் ஹெநா விஷ்ணு: ப்ரஸீத — சதுர்ப்பிச்ச சதுர்ப்பிச்ச த்வாப்யாம் பஞ்சபி ரேவ ச, ஹூயதே ச புநர்

த்வாப்யாம் ஸநோ விஷ்ணு: ப்ரஸீதது" என்னும் வைதிக ச்லோக ரத்னம் ஸம்ஸ்க்ருத பாஷையில் உபந்யஸிக்கப்பட்டது.

இந்தோரிலிருந்து விருந்தாவனம் செல்ல விரும்பி வடமதுரை சென்று சேர்ந்தோம். விருந்தாவனத்திலும் யமுனைப் பெருக்கு உளதாயினும் மதுரையில்தான் அது ஸ்ப்ருஹணீயமாகவுள்ளது. விலக்ஷணமான படித்துறைகள் அமைந்திருப்பது இங்கேதான். வ்யாஸ வாட்டென்னுமிடத்தில் வேணீ மாதவ மந்திரத்தில் நாம் தங்குவது வழக்கம். அங்கு வாசலிலேயே பெருகிக் கொண்டிருப்பது யமுனை. தற்போது அங்கு தீர்த்தத்தின் ஸம்ருத்தியும் ஸ்வச்சதையும் வாசா மகோசரம். அமாவாஸ்யாநுஷ்டானம் அங்கு ப்ராப்தமாயிற்று. அப்போது ஆண்டாளுடைய திருவாடிப்பூர மஹோத்ஸவம் நிகழ்வதனால் அன்று மாலையே விருந்தாவனம் சென்று சேரலாயிற்று. கீர்த்தி மூர்த்தியான கோவர்த்தனம் ஆத்ய ரங்காசார்ய ஸ்வாமியின் கட்டளைப்படி அங்கு நித்யோத்ஸவ நைமித்திகோத்ஸவாதிகள் குறையற நடந்து வருவது குறிப்பிடத்தக்கது. அங்கு இரண்டு நாள் ஆண்டாள் மஹோத்ஸவம் அற்புதமாக ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. அங்குள்ள பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்ரீ க்ருஷ்ணாவதார மஹிமையைப் பற்றி ஹிந்தியில் ஒருபந்யாஸம் ஸன்னிதியின் புஷ்கரிணிக்கரை மஹா மண்டபத்தில் நடத்தப்பட்டது.

அங்கிருந்து மறுநாள் உதயமே புது டில்லி சென்று சேர்ந்தோம். அன்று திருவாடிப்பூரம். நமது தென்னாட்டிலிருந்து ஆயிரக்கணக்கான ஸ்ரீவைஷ்ணவர்கள் அங்கு உத்யோகார்த்தமாகச் சென்று சேர்ந்திருப்பதனால் அவர்களது சிரத்தையினால் பல வருஷங்களாக ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த மஹாஸபை யொன்று நிறுவப்பட்டிருக்கின்றது. அந்த ஸபாதிகாரிகளின் அழைப்புக்கிணங்கியே நாம் அங்குச் செல்ல நேர்ந்தது. ஆழ்வாராசாரியர்களின் வருஷத் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனத்தை இந்த ஸபையார் நீண்டகாலமாக மிகுந்த ஊக்கத்துடன் நிகழ்த்தி வருகின்றார்கள். ஒவவோருத்ஸவ பரிபாலனம் ஒவ்வொரு மஹநீயருடைய உபயமாக நடத்தப்பட்டு வருகின்றது. அவிச்சிந்நமாகத் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனங்கள் நடந்து வருவதற்கு இது மிகச் சிறந்த உபாயமேயாகும். திருநக்ஷத்ரோத்ஸவங்கள்தோறும் திவ்ய ப்ரபந்த ஸேவை சாத்துமுறைகளும உபந்யாஸங்களும் ப்ரஸாத பணியார விநியோக கோஷ்டிகளும் சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றன.

இந்த ஸபையின் பதினெட்டாவது வருஷ பூர்த்திக் கொண்டாட்டமும் நேற்றைய திருவாடிப்பூர மஹோத்ஸவத்தன்று (13—8—61) ஸம்மிலிதமாயிற்று. இதை உத்தேசித்தே நமக்கு ஆஹ்வானம் கிடைத்து அவ்விடம் செல்ல நேர்ந்தது. அப்போதைய நிகழ்ச்சி முறைகளெல்லாம் அப்போதே பல பத்ரிகைகளில் வெளிவந்து விட்டபடியால் ஒன்றரை மாதத்திற்குமேல் இப்போது நாம் விவரித்தெழுதுவது வேண்டாவென்று விடுக்கப்பட்டது.



ஜகத் விக்க்யாதரான ஸ்ரீமதுபயவே. (லோக ஸபா ஸ்பீகர்) M. அனந்தசயனமையங்காரவர்களின் தலைமையில் உபந்யாஸங்கள் நடைபெற்றன. திருவாடிப்பூரத்தைத் தொடர்ந்து 7 நாட்கள் புதுடில்லியில் உபந்யாஸங்கள் நடைபெற்றன. (19—8—61) இரவு உபந்யாஸத்தை முடித்து அன்றே டில்லியை விட்டுப் புறப்பட்டு ஹரித்வாரம் சென்றோம். அங்கே 15 நாளாவது ஆனந்தமாக வஸிக்க வேணுமென்று ஆசை



யிருந்தது. அங்கு கங்கைக் கரையில் நமக்குக் கிடைக்கிற வஸதி லோகோத்தரமானது. யாவஜ்ஜீவம் அங்கே யிருந்தாலும் ஆசை தீராது. ஆனாலும் இப்போது நாலைந்து நாள் மட்டுமே அங்கு வஸிக்க இயன்றது. இடையில் ஒருநாள் ஹ்ருஷீகேசம் லக்ஷ்மணஜூலா ஸேவித்து வந்தோம்.

ஹ்ருஷீகேசத்தில் ஸ்ரீலஸ்ரீ. சிவானந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் பிரபாவம் நாளுக்கு நாள் ஓங்கி வளருகின்றது. மஹா தபஸ்விகளான இப்பெரியார் ஆங்கு ப்ரத்யக்ஷ தெய்வமாகவே கொண்டாடப்பட்டு வருகிறார்கள். இவர்களால் அங்கும் எங்கும் நிகழ்ந்துவரும் லோகோபகாரங்கள் வாசாமகோசரமென்பதை நாம் நமது பத்ரிகைகளில் பலகால் பிரசுரித்திருக்கிறோம். தற்போது வய:க்ரமத்தில் இவர்களுடைய திவ்யதேஹம் மிகத் தளர்வுற்றிருக்கின்றது. ஆனாலும் அவர்களுடைய உத்ஸாஹமும் ஜீவசந ஶக்தியும் சிறிதும் தளர்வுறவில்லை. பல நாடுகளிலிருந்து வந்து சேர்ந்து இவர்களுக்குப் பாதஸேவை செய்யும் தொண்டர்கள் பல பலர். சம்பளம் பெற்று வேலை செய்யும் தொண்டர் இங்கு ஒருவருமிலர். பெரிய பெரிய உத்யோகங்களிலிருந்து விச்ராந்தி பெற்றவர்கள் இங்கு ஸேவை செய்வது ஆச்சரியமன்று; சிரமப்பட்டுப் பெற்றிருந்த மிகப் பெரிய உத்யோகங்களையும் வெறுத்து விட்டிட்டு விலகி வந்து சேர்ந்து சுவாமிக்குத் தொண்டு செய்வதையே பிறவிப் பேறாகத் துணிந்து ஈடுபட்டிருப்பவர்கள் நூற்றுக்கணக்கா யிருப்பதுதான் மிகுந்த ஆச்சரியம். ஸ்வாமிகள் யாரையும் வருகவென்று அழைப்பது கிடையாது. "வல்வினையேனை யீர்கின்ற குணங்களை யுடையாய்!" என்று எம்பெருமானை நோக்கி ஆழ்வாரருளிச்செய்த வண்ணமாக இவர்களுடைய நற்குணங்களே அவரவர்களை வலியப் பிடித்திழுக்கின்றன. இது அவரவர்கள் சொல்ல நாம் கேட்டதே. ஆங்கிலேயரும் பலர் தம்பதிகளாக வந்து ஹிந்துக்களின் நடையுடை பாவனையைப் பேணித் தொண்டு செய்து வருவது மிகவற்புதம்.

முதலில் ஸங்குசிதமாயிருந்த இவ்வாச்ரமம் தினே தினே அபிவிருத்தி பெற்று மிக மிக விசாலமாய் விளங்காநின்றது. இதின் விபுலமானவோர் அவகாசத்தில் தினப்படி இரவு 7 மணி முதலாக பிரசங்க ஸபை கூடும்படியான ஏற்பாடு நெடுநாளாக வுள்ளது. அதற்கு ஸத்ஸங்கமென்று பெயர். அந்த ஸமயத்தில் ஸ்ரீஸ்வாமிகள் அங்கு விஜயஞ் செய்வார்கள். பக்தர்கள் யாவரும் வந்து குழுமியிருப்பார்கள். ஸ்ரீ சுவாமிகளின் காட்சியை எளிதாகப் பெறுவதற்கு இது நல்ல தருணம். அந்த ஸத்ஸங்க ஸமயத்தில் பஜனைகள் நாம ஸங்கீர்த்தனங்கள் உபந்யாஸங்கள் விசேஷமாக நடைபெறும். நாம் அங்குச் சென்றிருந்த வந்நாள் ஸ்வாமிகள் முன்னடியே ஸத்ஸங்க பவனத்தில் விஜயஞ் செய்து "இன்று அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் சொற்பொழிவு" என்று முன்னுரை கூறினர்கள். அங்குக் கூடியிருந்தவர்களில் பெரும்பான்மையோர் நெடுநாள் சென்னையில் வாழ்ந்து அங்கு நம்முடைய உபந்யாஸ கோஷ்டிகளிலும் அந்வயித்திருந்தவர்களாதலால் யாவரும்

குதூஹலங் கொண்டிருந்தனர். அப்போது ஸம்ஸ்க்ருதத்தில் அரை மணி நேரமும் ஹிந்தியில் ஒரு மணி நேரமும் நாம் ஹிமாலயத்தின் பெருமைபற்றி ப்ரஸங்கம் செய்யலாயிற்று.

ஸ்வாமிகள் பரமானந்தமடைந்து வ்யாக்கியான வாசஸ்பதி யென்னும் விருதை நமக்கு அளித்தார்கள். இவர்களே **6** வருஷங்களுக்கு முன்பு வேதபாரங்கதர் என்னும் விருதை யளித்திருந்தார்கள்.

ஹ்ருஷீகேசத்திலிருந்து மீண்டும் ஹரித்வாரம் சேர்ந்து பின்னும் இரண்டு நாள் தங்கியிருந்து அங்கிருந்து அயோத்யைக்குச் சென்று சேர்ந்தோம். அன்று ச்ராவண பௌர்ணமி யாதலால் ஸரயூ தீரத்தில் உபாகர்மாநுஷ்டானம் ப்ராப்தமாயிற்று. அன்று அங்கு மேளா என்பதுபற்றி லக்ஷக்கணக்கான பக்த ஜனங்கள்—வருவதுஞ் செல்வதுமாயிருந்த காட்சி எங்குங் கண்டறியாததாகவே யிருந்தது. ஊர் சிறியதே யாகையால் இவ்வளவு ஜன ஸம்மர்த்தத்தைத் தாங்கக்கூடியதாகவே யில்லை. இவ்விடத்தில் வைராகிகளின் ஸமூஹம் அபரிமிதமான தென்பதை உலகமறியும். அந்த ஸமூஹத்தில், முற்காலத்தில் வித்வான்கள் மிகக் குறைவு. நாளடைவில் வித்வான்களல்லாதார் விரளர்களாய் விட்டனர். நியாயம், வியாகரணம், வேதாந்தம் முதலான சாஸ்த்ரங்களிலும் தேறினவர்கள் பலர் இங்கு நிரம்பியுள்ளார்கள். அவர்களது ஸமாஜத்திலும் அளவளாவ நேர்ந்தது.

அயோத்யையிலிருந்து ப்ரயாகக்ஷேத்ரம் (Allahabad) சென்றோம். இப்போது அங்கு கங்கா யமுநா ப்ரவாஹம் அதிஸந்நிஹிதமாய் ஸ்வச்சமாய் விளங்குகின்றது. இவ்விடத்திற்கு தாராகஞ்ஜ் என்று ப்ரஸித்தி. தாரை பெருகுமிடமென்று பொருள். முன்பு இவ்விடத்தில் தக்ஷிணதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் புகலிடம் த்ரிதண்டிமடம் என்னுமோரிடமே யிருந்தது. இப்போது அருகிலேயே 'மஹந்த் கோவிந்தாசார்ய மந்திரம்' வெகு விசாலமாக ஏற்பட்டு ஏககாலத்தில் ஆயிரவர் வந்தாலும் இனிதாக இடமளிக்கும் ஸௌகரியமுடையதாக விளங்குகின்றது. இவ்விடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலையும் வெகுசிறப்பாக நடைபெற்று வருகின்றது. இங்கே காயத்ரீ ஜபத்திற்காக ஒருநாள் மட்டும் தங்கியிருந்து, மறுநாள் புறப்பட்டுக் கல்கத்தா சேர்ந்தோம். இடையில் காசியில் இறங்கவேண்டியிருந்தும் அவகாசக் குறைவினால் கல்கத்தா நகரம் சென்று சேர நேர்ந்தது.

மிகப் பெரிய நகரமான விதில் வைதிகர்கள் ஸுகவஸதி செய்யப் பாங்கானவிடம் தெரிவிக்கலாகிறது. ஹௌரா ஸ்டேஷனிலிருந்து ஆறு மைல் தூரம் செல்லவேண்டும். பாலிகஞ்ஜ் என்னுமிடத்தில் ஸத்யநாராயண மந்திரம் என்கிற பெரிய ஆலயம் பத்தெட்டு வருஷங்களுக்குள்ளாகப் புதிதாகக் கட்டப்பட்டிருக்கின்றது. இதை ப்ரஹ்மசாரி மந்திரமென்றும் சிலர் வழங்குவர். (Calcutta South Gate No. 3.) என்று சொன்னால் ரைல் ஸ்டேஷனிலிருந்து பத்து நிமிஷத்தில் இங்குக் கொண்டு சேர்த்துவிடுவர்கள். இந்த மந்திரத்திற்கு மிக ஸமீபத்தில் ஏரி ப்ரவாஹமொன்று பெருகுகின்றது. பரம மதுரமான தீர்த்தம். இடமும் பரமபவித்திரம். இவ்வளவு ஸௌகரியமான விடம் மஹா நகரத்தில் கிடைப்பது மிகவரிது. மந்திரமும் பக்தியை வளரச் செய்யுமிடம்.

இந்த நகரத்தோடு நம்முடைய வடநாட்டு யாத்திரையை முடித்து 1—9—61-ல் ஸ்வஸ்தானம் சேரப்பெற்றோம். .... .... .... (*)

லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகிநோ பவந்து.

ஸ்ரீரஸ்து.

# நூற்றைம்பது நல்வார்த்தைகள்.

(ப்ர—அ.)

ஸ்ரீராமாநுஜன் ஸஞ்சிகைகள் நூற்றைம்பது வெளிவந்துள்ளனவன்றோ. அதற்கு ஒரு நினைவு மலராக "நூற்றைம்பது நல்வார்த்தைகள்" பக்தர்களுக்கு நித்யாநுபாவ்ய ரஸாயனமாக வெளியிட வேணுமென்று ஆசை தோன்றியது. அதனால் இந்த நல்வார்த்தைத் திரள் அடைவே வெளியிடலாகிறது. அம்ருத லஹரியில் 211 ஸஞ்சிகைகள் வெளிவந்ததற்கு நினைவு மலராக அதில் இருநூற்றுப் பதினொரு மணித் திரள் வெளியிடப்பட்டு வருவது போல. அவையு மிவையும் சேர்ந்து மொத்தம் **361** மணித் திரள்கள் பக்தர்களுக்குக் கிடைப்பது விசேஷமன்றோ. ... .... .... *

## "பண்டு பண்டாக்க — பண்டு பண்டு போலொக்கும்."

1. ஆண்டாள் நாச்சியார் திருமொழியில்—"காணியினியோர் கருமமில்லை நாலயலாரும் அறிந்தொழிந்தார், பாணியா தென்னை மருந்து செய்து பண்டு பண்டாக்க வுறுதிராகில்" என்றருளிச் செய்கிறாள். இங்கே "பண்டு பண்டாக்க" என்று பண்டு என்பதை இரண்டு தடவை பிரயோகம் செய்திருப்பதில் அடங்கியுள்ள விசேஷார்த்தம் மிக அற்புதமானது. இப்பாசுரம் விரஹ தசையில் சொல்லுவது. இந்த விரஹாவஸ்தை நீங்கி ஸம்ச்லேஷ தசை உண்டாகவேணும் என்பதுதானே ஆண்டாளுடைய நோக்கம். அதற்கீடாக "என்னைப் **பண்டாக்க**" என்றால் போராதோ? 'பண்டு பண்டாக்க' என்று இரட்டிக்க வேணுமோ? **திருமங்கை** யாழ்வாரும் இங்ஙனே அருளிச்செய்திருக்கக் காணுநின்றோம். "கெண்டை யொண்கணும் துயிலும், என்னிறம் பண்டு பண்டுபோ லொக்கும். மிக்க சீர்த் தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே, வண்டு கொண்டுவந்து ஊதுமாகிலே" என்பது பெரிய திருமொழிப் பாசுரம். அதுவும் விரஹ தசையிற் பேசுவதேயாம். அதிலும் பண்டு பண்டு போலென்று இரட்டித்திருப்பதில் ஒரு விசேஷார்த்த மிருக்க வேண்டும்; கேண்மின்.

2. இப்பாசுரம் விச்லேஷ தசையில் சொல்லுவதா யிருந்தாலும் பண்டையதான ஸம்ச்லேஷ தசை வேண்டுமென்று அபேக்ஷிக்கிறதன்று. இப்போதைய அவஸ்தைக்கு முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ, அதற்கும் முற்பட்டதான யாதொரு அவஸ்தை யுண்டோ, அவ்வவஸ்தையில் நான் எப்படி யிருந்தேனோ அப்படி என்னை இப்போது ஆக்க விரும்புவீர்களாகில்—என்று விவக்ஷித்து ஆண்டாள் "என்னைப் பண்டு பண்டாக்க வுறுதிராகில்" என்கிறாள். திருமங்கையாழ்வாருடைய விவக்ஷிதமும் இங்ஙனேயாம்.

3. இதனை விவரிப்போம்; இப்போதைய அவஸ்தையாவது விரஹாவஸ்தை. இதற்கு முந்திய அவஸ்தையாவது ஸம்ச்லேஷாவஸ்தை. அதற்கும் முந்திய அவஸ்தையாவது—பகவத் விஷய வாஸனையே தெரியாமல் அந்யபரமாகப் போதுபோக்கின காலம்; உண்டியே உடையே உகந்திருந்த காலமென்று கொள்க. அப்போது சரீரம் வாடாமல் வதங்காமல்

மாமை குன்றாமல் பசுகு பசுகென்றிருக்குமன்றே. நிர்விசாரமாக உண்டுடுத்துத் திரியுங் காலத்திலே மேனி நித்யபுஷ்டமாயிருக்கு மென்பதில் ஸந்தேஹமில்லையே. பகவத் விஷயத்தில் வாஸனை பண்ணிப் போந்தது முதலாக "ஸம்யோகா விப்ரயோகாந்தா:" என்றபடி க்ஷணகால ஸம்ச்லேஷமும் சிரகால விச்லேஷமுமாய் வ்யஸநமே அதிகமாகச் செல்லுகையாலே இப்போதைய விரஹாவஸ்தைக்கு முந்தியதான ஸம்ச்லேஷாவஸ்தையிலுள்ள நிறத்தை விரும்புவதில் ரஸமில்லையே. இவ்விடத்தில் "அன்னை முனிவதும் அன்றிலின் குரலீர்வதும், மன்னு மறிகடலார்ப்பதும் வளை சோர்வதும், பொன்னங் கலையல்குல் அன்னமென்னடைப் பூங்குழல், பின்னை மணாளர் திறத்தமாயின பின்னையே" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தைச் சேர்த்துக்கொள்ளத்தகும். "என்றைக்கு நான் பகவத் விஷயத்தில் ஈடுபடத் தொடங்கினேனோ அன்று முதலாகவேதான் எனக்கு அனர்த்த பரம்பரைகள்" என்பது மேற்குறித்த பாசுரத்தின் கருத்தாதலால் ஸம்ச்லேஷ தசையோடு விச்லேஷ தசையோடு வாசியற இரண்டுமே மெலிவுக்கு உறுப்பு என்பது கொள்கை. ஆகவே, ஸம்ச்லேஷ தசைக்கும் முந்தியதான ஸம்ஸாரி தசையாகிற அந்ய பரத்வாவஸ்தையில் நிறத்தை விரும்புவது யுக்தமாதலால் அதனை விரும்புகின்றமை தோன்ற "பண்டு பண்டு" என்றது.

4. இவ்வளவு அர்த்தங்களையும் இரண்டு வாக்கியத்திலே அடக்கி யருளிச்செய்தார் பெரியவாச்சான் பிள்ளை:—

"ஸம்ச்லேஷிப்பதற்கு முன்புத்தைப் பூர்த்தி எனக்கு உண்டாகப் பார்த்திகோளாகில்;—
கலக்கப் புக்கவன்று தொடங்கி மெலிவுக்கேயிறே க்ருஷி பண்ணிற்று." என்று.

5. "என்னிறம் பண்டு பண்டுபோலொக்கும்" என்கிற பெரிய திருமொழிப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே சிறிது தெளியக் காட்டியருளினர். அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு;—

"அவன் வாய்புலற்றும் நிறம் அறப் பண்டு போலேயாம். கலக்கையாகிறது பிரிவுக்கு அங்குரமிறே. கலந்து பிரிந்து லாபாலாபங்களறியாதே பூர்ணையாயிருந்தபோதை நிறம்போலேயாம்."

## நம்மாழ்வாருடைய முதன்முதலான தூது.

6. நம்மாழ்வார் திருவிருத்தத்தில் முதன்முதலாக அன்னப் பறவைகளை எம்பெருமான் பக்கலில் தூதுசெல்ல விடுகின்றார். இது பறவையை விட்டபடியன்று; ஆசாரியர்களையே எம்பெருமான் பக்கலில் தம் நிலைமையை அறிவிக்கும்படி வேண்டியவாறு. "தேசிகாஸ் தத்ர தூதா:" என்கிறார் தேசிகனும். ஹம்ஸத்தினிடத்துள்ள குணங்கள் யாவும் ஆசார்யனிடத்திலே அநுஸந்திக்கத்தக்கவையாகும். சில குணங்கள் இங்கே நிரூபிக்கப்படுகின்றன.

7. விவேக கௌசலம் என்பது ஹம்ஸத்திற்கும் ஆசாரியர்க்கும் பொதுவாக வுள்ளதொரு குணம். "அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பச் ச காலோ பஹவச் ச விக்நா:, யத் ஸாரபூதம் தத் உபாததீத ஹம்ஸோ யதா க்ஷீரமிவாம்புமிச்ரம்" என்று நூல்கள் கூறுகின்றன. நீரையும் பாலையும் கலந்து வைத்தால் அன்னமானது அஸாரமான நீரைத் தள்ளி ஸாரமான பாலைப் பிரித்தெடுக்க வல்லமையுடையது. அதுபோல் ஆசாரியர்கள் ஸாராஸாரகதம்பிதமான நூற்களில் அஸாரப் பொருள்களை யொதுக்கித் தள்ளி, ஸாரப் பொருள்களையே எடுத்து உபஜீவிக்க வல்லவர்கள்.

8. எம்பெருமான் வேதங்களை மீட்டுக் கொணர்ந்து உபதேசித்தருளுங்கால் ஹம்ஸ ரூபத்தைப் பரிக்ரஹித்து உபதேசித்ததாக இதிஹாஸ புராணங்கள் கூறுகின்றன. "அன்ன மதாயிருந்து அங்கற நூலுரைத்த" என்றும், "பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள் நிறங்கெட வொருநாள், அன்னமாயன்றங்கு அருமறை பயந்தான்" என்றும் ஆழ்வார்களும் அருளிச்செய்வர்கள். ஆக, சாஸ்த்ர ப்ரதானம் பண்ணுவதற்கு ஹம்ஸரூபம் வாய்த்தாற்போலே ச்ரோதாக்களைக் குறித்து சாஸ்த்ரங்களை உபதேசிக்க ஆசார்ய ரூபம் வாய்த்தபடி.

9. "ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்த்தமாம்பஸி" என்ற வசனத்தில் ஹம்ஸங்களுக்குச் சேற்று நிலங்களில் கால் பொருந்தாதென்று சொல்லப்படுகிறது. அப்படியே "பிறப்பாம் பொல்லாவருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந் நிலத்தே அழுந்தார்" (திருவிருத்தம். 100) என்கிறபடியே ஆசாரியர்கள் ஸம்ஸாரச் சேற்று நிலத்திலே சிறிதும் பொருந்தாதிருப்பர்கள்.

10. "பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின் சென்று" (பெரிய திருமொழி) என்று ஹம்ஸமானது ஸ்த்ரீகளின் நடையழகைக் கண்டு தானும் அப்படி நடக்கைக்காகப் பின் செல்லுமென்று சொல்லப்படுகிறது. அதுபோல, ஆசாரியர்களும் *அன்ன நடைய வணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின்செல்லுவர்களாம். அதாவதென்னென்னில்; பிராட்டியின் நடையாவது அவளுடைய நடத்தை; சேதநர்களைக் குறித்து எம்பெருமான் திறத்தில் புருஷகாரம் செய்வதே பிராட்டியின் பிரதான க்ருத்யமாகும். அதை ஆசார்யர் அநுகரிக்கையாவது, தாங்களும் அப்படி புருஷகார க்ருத்யத்திலே ஊன்றியிருக்கையாகும். பிராட்டி புருஷகாரம் செய்யாவிடில் எம்பெருமான் முக்தி ஸாம்ராஜ்ய மளிக்கமாட்டாதது போலவே ஆசாரியர்கள் புருஷகாரம் செய்யாவிடினும் அதனை அளிக்க மாட்டான் என்பதை "உததே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ" என்கிற ந்யாஸ திலக ஸூக்தியினால் தேசிகன் வெளியிட்டருளினர்.

11. *"அன்னமென் கமலத்தணி பலர்ப்பீடத்து அலைபுன லிலைக் குடை நீழல் ......... வீற்றிருக்கும்" (பெரிய திருமொழி) ஹம்ஸமானது மேலேயெழுந்த தாமரை யிலையைக் குடையாகக் கொண்டு வீற்றிருக்கும் என்று சொல்லப்பட்டது. "அக்கமலத் திலை போலும் திருமேனி யடிகள்" என்கிற திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய திருமேனி தாமரை யிலையாகச் சொல்லப்படுவதால், பத்ம பத்ர நிபச்யாமலமான அந்தத் திருமேனியை ஆசாரியர்கள் தங்களுக்கு ஸம்ஸார துக்க ஆதபம் தட்டாதபடி ஒதுங்க நிழலாகவுடையராவர்.

12. "அன்னம்—செந்நெ லொண்கவரி யசைய வீற்றிருக்கும்" (பெரிய திருமொழி) என்று, பக்வபலமான செந்நெலின் அசைவைக் கவரியாக (சாமரமாகக்) கொண்டு வீற்றிருக்கு மென்னப்பட்டது. *அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்* என்னும்படி பரிபக்வமான ஞானத்தை யுடையரான சிஷ்யர்களைச் செந்நெற் கதிர்களாகக் கொள்ளக் கடவது; அவர்கள் கைங்கர்ய வ்ருத்திகளை [சாமரை வீசுதல் முதலியவைகளை]ச் செய்யுமாறு ஆசாரியர்கள் எழுந்தருளி யிருக்கும்படியைச் சொல்லுகிறது.

13. "சங்கமவை முரலச் செங்கமல மலரையேறி அன்னமலி பெடையோடு மமரும்" (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது சங்குகளின் முழக்கத்தை இனிதாகக் கேட்டுக்

ஸ்ரீரஸ்து ||



ஸ்ரீ ஹஸ்திகிரிமஹாவிபவராஜமஹாரிஜாதாய நம:
ஸ்ரீவாராங்கரஸாரகாருயதிவரவரவரமுநீந்த்ரேப்ய: நம:

பெருமாள்கோயில் ஸ்ரீ. உ. வே. உபயவேத கண்டீரவ திருமலே விஞ்சிமூர் பரமைகாந்தி

# சிங்கராசாரியர்க்கு

பிலவஸூ புரட்டாசிமீ உத்தராட நக்ஷத்திரம் புதன்கிழமை (20-9-61)

நடைபெற்ற

# ஷஷ்ட்யப்தபூர்த்தி நன்னுளில்

ஸ்ரீ காஞ்சீ ப்ர· அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் பரிசளிப்பான

# மங்களாசாஸந பத்ரிகை.

ஸ்ரீமத் கௌசிகவம்ஶதுக்தஜலதே: ராகாஶஶாங்கோபம !
ஶ்ருத்யந்தத்வயவிஸ்தராவரத ! ஸ்ரீமாகண்டீரவ ப்ராதித !
ஸ்ரீஸிம்ஹாசல ! ஶ்ரீயாஶ்ரயதாஸயதிவர ஸ்ரீவம்ஶமுக்தாமணே !
ஶ்ரேயஸ்ஸந்ததிஸந்நாஹம் வஹவஹ ஸ்ரீ ஸ்ரீஶவீக்ஷாவஶாத் || க

ஶாந்தே ஷஷ்டிவத்ஸரே நவஸ்ரீஸதி ஶோஹநே
வர்த்தயாதநாயக்லே ப்ரஜாயஸ்வ ஸிம்ஹஹோ: |
வாந: ஷஷ்டிஷஷ்வீக்ஷணம் ஹவிஷ்யதி ப்ர்ஸாதவே
த்ரீ வயம் தேஷாஸஷாவஷாத ஸதசேவ தே || உ

ஹஸ்த்யத்ரீ நாயகாநணாவரிணாதஹோந்த்ரா
தந்த்ரீக்கிம்கரவதே ப்ரயதாஹிஷிக்த |
ஸவம் நிரஞ்ஜரதஹ ஶ்ருதிஹோம்யவாசாம்
ஸேவாஹி ராதூஜநிவாஸாய்ககதாம் மஹஸ்வ || ௩

ஶம் வைதிகஶ்ரீ வைதிகஸேவகஶ்ரீஸேவஜா-
ஸ்திதாஸ் ஸஹிதாஸ் ஸம்ஹிதாஸ் க்ருதிஷு |
யதிராஜ ஸேவநாய ப்ரயோகிஸேவஜா-
ஸ்தவி வர்ணப்ரவ்ருத்தாஸ்ய விஶ்வஸ்த்ர ஜயதாத் ॥ ௪

ப்ரஸேகாஞ்சிஸகாவ்யாவிவ்யாதிஷ்ட காடூக்கே ஸாவிராஜ |
ஸுநாவதர்தே யரண்யம், ஸா ஸுயிவாத்வயர்ஹாவகாவேந்தி ॥ ௫
காஞ்சீபுர நயக்ஷ்வர்ஹவேதவீ ஹவதீய ஸஜ்ஜநேள ஸாவிராஜ |
விஜயத ஜதிஹாவி ஸவேர் விதஞ்சி தாவேவ நிவர்ஹஸ்வ விபு ॥ ௬

வேதவேதாங்கயோவேர்ஜயக்ஞ்யாதிகாம்
வாம்ஶாஷாஸிஹ வேதஸஞ்ஞா ஸ்வயம் |
யாவதாயாஸ்த்வம் ஸாயா நிவர்த்தர்யது
வைதிக ஶ்ரீவிஶேஷேண வர்த்ஸ ஹோ: ॥ ௭

ஶாதாஶஹவ்ருயிதஸம்யஶி ஸாவர்ஹேளஶ
வீக்ஷாவஶாஸ்ஶிஶாதஶாவ்ருஹ்ருதி வ்ருவ்ருஜ: |
ஸிம்ஹாயர் ஸஷ ஜயதாஶிஹ நித்யவ்ருஜ
ஸஞ்ஜோஷஹாகிதி கஸீஶவதேஶயர்யேஶ ॥

## வாழ்த்துப்பாசுரம்

பேருளாளன் பேருருட்பெருக்கால் பேர்பெறு கலைகள் பெற்றனையால்
சீரியசிங்க மென்னுநின்பெயரைச் சீர்பெற நிறுவினை யுலகில்
கூரியஞானங் கொண்டனை குலத்திற்குரியநல்லொழுக்கமுங் கொண்டாய்
ஆரியர்திரளில் சீரியசிங்கா! ஆழ்கடலுலகில் நீடுறைவாய்.

அத்திகிரி யுச்சிமணி யாமருளா ளப்பெருமான்
நித்தியமும் நின்சேவை கேட்டுகந்தே—எத்திசையும்
பாருலகோ ரெய்தும் பரமாம் பொருளனைத்தும்
சீருறவே நல்குஞ் சிறந்து.

சுபமஸ்து.

ஸ்ரீ

திவ்வியகவி பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்த

அஷ்டப் பிரபந்தத்தினுள்

# திருவேங்கடமாலை

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

எழுதிய

விளக்க வுரையோடு கூடியது

## ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

கிடைக்குமிடம் :

P. B. ANNANGARACHARYA

க்ரந்தமாலா ஆபீஸ், சின்னகாஞ்சீபுரம்.

விலை]  1961  [ரூ.2-00

ஸ்ரீ

# முன்னுரை

'திவ்வியகவி பிள்ளைப் பெருமாளையங்கார்' என்று பிரசித்தி பெற்ற அழகிய மணவாளதாசர் இயற்றிய அஷ்டப்பிரபந்தம் இலக்கிய நூல்களுள் மிகச் சிறந்து விளங்குவது. "சொல்நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் துறையின் நோக்கும் எந்நோக்குங்காண இலக்கியமாவது" இது.

| | |
|---|---|
| திருவரங்கக் கலம்பகம். | திருவேங்கடமாலை. |
| திருவரங்கத்து மாலை. | திருவேங்கடத்தந்தாதி. |
| திருவரங்கத் தந்தாதி. | அழகரந்தாதி. |
| சீரங்கநாயகரூசல். | நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி. |

என்னுமிவை அஷ்டப்பிரபந்தமென வழங்கப் பெறும். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத் தலைவரான எம்பெருமானார் அருளிச் செய்த சரணாகதிகத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம் என்னுமிவை பிற்காலத்தவர்களால் கத்யத்ரயம் என வழங்கப் பட்டது போலவே இப்பிரபந்தங்களும் பிற்பட்டவர்களால் அஷ்டப் பிரபந்தமென் றொரு தொகுதியாக வழங்கப்பெற்றது. எனவே, நூலாசிரியர் அஷ்டப் பிரபந்த மென்று பெயரிட்டாரல்லர் என்றதாயிற்று. "அஷ்டப்பிரபந்தம் கற்றவன் அருமைப் புலவன்" என்னும் வழக்கச் சொல்லினால் இதன் அருமைபெருமை விளங்கும். அந்தாதி பாடுதலிலும், (யமகம்) திரிபு சிலேடை முதலிய சொல்லணிகளை யிட்டுப் பாடுதலிலும் இவ்வாசிரியர் நிகரற்ற நிபுணர்.

கூரத்தாழ்வான் திருக்குமாரரும் உலகம் நிறைந்த புகழாளருமான பட்டருடைய திருவடிகளை ஆச்ரயித்து உய்ந்தவரான இவ்வாசிரியர்க்கு ஆழ்வார்களிடத்திலும் ஆசிரியர்கள் பக்கலிலும் அளவு கடந்த பக்தி விளங்குவது ஆச்சரியமன்று. பெரும்பாலும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பின்பற்றியே இவ்வஷ்டப்பிரபந்தம் அவதரித்துள்ளது: இவ்வாசிரியர் தென்மொழியிற் போலவே வடமொழியிலும் தேர்ச்சி பெற்றவர் என்பது இவரது நூல்களினால் நன்கு விளங்கும். ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு இவ்வஷ்டப்பிரபந்தம் நிதிபோன்றதென்பர்.

கீர்த்திமூர்த்தியாய் விளங்கும் வை. மு. சடகோப ராமாநுஜாசாரியார் ஸ்வாமிகள் இவ்வஷ்டப்பிரபந்தத்திற்கு விரிவுரையியற்றி வெளியிட்டுள்ளாரெனினும் அவ்வுரை இப்போது கிடைப்பது அரிதாயிருத்தலாலும் அவ்வளவு விரிவு வேண்டாதாரை உகப்பிக்க வேண்டியும் மூலத்தின் பொருள் ஐயந்திரிபற விளங்கும்படியானவோர் விளக்கவுரையை ஸம்பிரதாய நெறியிலெழுதி வெளியிட எனது நண்பர்கள் சிலர் நியமித்தருளினராதலால் இவ்வுரையை எழுதத்தொடங்கி நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி யுரையை முந்துற முன்னம் வெளியிட்டேன். இப்போது திருவேங்கடமாலைக்கு உரை யெழுதி வெளியிடப்படுகின்றது. .... .... .... *

ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

**திவ்வியகவி. பிள்ளைப்பெருமாளையங்கார் இயற்றிய**

**அஷ்டப்பிரபந்தத்தினுள்**

# திருவேங்கடமாலை

**ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கரா சாரியர் இயற்றிய**

**விளக்கவுரையுடன் கூடியது.**

*திருவேங்கடமாலை யென்பது—திருவேங்கடமென்னும் திருமலையைப் பற்றித் தொடுக்கப்பட்ட பாமாலையாகும். மலர்கள்கொண்டு தொடுக்கப்படும் பூமாலைபோலச் சொற்கள் கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையாகிய பிரபந்தமிது. எனவே, மாலை யென்பது உவமையாகு பெயராயிற்று. அன்றியும், பலவகைப் பிரபந்தங்களுள் மாலையென்பது மொன்று. ஒரு விஷயத்தைக் குறித்துப் பல செய்யுள் கூறுவது மாலையென்று அதனிலக்கணம் கூறுவர். ஸ்ரீநிவாஸனென்று வடமொழியிலும்; அலர்மேல்மங்கை யுறைமார்பனென்று தென்மொழியிலும் திருநாமம் பெற்ற திருவேங்கடமுடையானது திருவடிகளிலே சூட்டின திருமாலையாமிது. "செய்ய சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்ற பொய்கையாழ்வார் பாசுரமிங்கு நினைக்கத்தக்கது. இங்கு வேங்கடமென்ற சொல் உபலக்ஷண மரியாதையினால் வேங்கடவனையுங் குறிக்கும். ஸம்ஸ்க்ருத கவிகளில் சிலேஷயமக சக்ரவர்த்தியென்று சில மஹான்கள் புகழ் பெற்றிருப்பர்கள்; அத்தகைய புகழ் தமிழ்க்கவிகளில் இத்திவ்விய கவிக்கு ஒப்புயர்வற்று விளங்கும். இந்நூலில் யமகரசநா ஸாமர்த்தியம் செய்யுள்தோறும் விளங்கும். சிலேஷரசநா ஸாமர்த்தியம் பலபல பாடல்களில் விளங்கும். ஸாதாரண கவித்துவம் இவரிடத்துக் காணவரியதே.* .... .... *

காப்பு.

திண்பார் புகழுந் திருவேங் கடமாலை
வெண்பாவால் நூறும் விளம்புதற்குக்—கண்பாராய்
நாராய ணாவடியேன் நாடுந் தமிழ்வேத
பாராய ணாசடகோ பா.

| | | | |
|---|---|---|---|
| நாராயணா | நாராயணமூர்த்தி யானவரே ! | திரு வேங்கடம் | திருமலை விஷயமாக |
| அடியேன் நாடும் | அடியேனால் விரும்பப்படுகின்ற | மாலை நூறும் | மாலையான பாசுரங்கள் நூறையும் |
| தமிழ் வேத பாராயணா | தமிழ் வேதத்தை யருளிச் செய்தவரே ! | வெண்பாவால் | வெண்பா வென்னும் யாப்பினால் |
| சடகோபா | நம்மாழ்வாரே ! | விளம்புதற்கு | அடியேன் விளம்புமாறு |
| திண் பார் புகழும் | திண்ணிய நிலவுலகத்தார் யாவராலும் புகழப்படுகின்ற | கண் பாராய் | கிருபை செய்தருள்வீராக. |

** * * திருவேங்கடமாலை பாடத்தொடங்கிய ஐயங்கார் முந்துற முன்னம் நம்மாழ்வாரை வணங்கி வேண்டிக்கொள்ளுகிறார். தேவரீருடைய க்ருபாகடாக்ஷத்தினால் அடியேன் உத்தேசித்துள்ளபடி வெண்பா நூறும் இடையூறின்றி வெளிவருகவென்று. திருமலையில் ஈடுபட்டவர்களுள் நம்மாழ்வாரே தலைவராதலால் அவருடைய கருணாகடாக்ஷமே இந்நூல் தலைக்கட்டுதற்கு முக்கிய ஸாதனமென்று கருதினர். 'அடியேன் நாடும்' என்றது - தமிழ்வேதத்திற்கும் தமிழ்வேதபாராயணனாகிய சடகோபற்கும் அடைமொழியாகத் தகும். ஆழ்வாரை நாராயணா! என விளித்தது - நாராயணனுக்கும் ஆழ்வார்க்குமுள்ள அபேதத்தை யநுஸந்தித்தாம். "சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ—*

*தாமம், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்குமுளவோ பெருமா னுனக்கு ?!' என்று ஆன்றோர் வினவியது காண்க.* ... .... .... .... *

(திருவேங்கடமுடையானைக் குறித்த காப்பு)

**மூலமே யென்றகரி முன்வந் திடர்தொலைத்து**
**நீலமே கம்போல நின்றானைப்—பாலாய**
**வேலைநடு விற்றுயிலும் வித்தகனை வேங்கடத்து**
**மாலையன்றிப் பாடாதென் வாய்.**

| | | | |
|---|---|---|---|
| மூலமே என்ற கரி முன் வந்து | ஆதிமூலமே யென்றோலமிட்ட கஜேந்திராழ்வானுக்குக் காட்சிதந்து | பால் ஆய வேலை நடுவில் துயிலும் வித்தகனை | பால்மயமான கடலில் நடுவில் யோக நித்திரை செய்கின்ற ஞான சொரூபியுமான |
| இடர் தொலைத்து | (அவனுடைய) துன்பத்தைப் போக்கி | வேங்கடத்து மாலை அன்றி | திருவேங்கட முடை யானையல்லது (வேறொரு கடவுளை) |
| நீலமேகம் போல நின்றானை | நீலமேகம் போல் நின்றருளியவனும் | என் வாய் பாடாது | எனது வாய் துதிக்கமாட்டாது. |

**** திருமாலே பரம்பொருளாந் தன்மையை விளக்கவல்ல இதிஹாஸ புராண கதைகளுள் கஜேந்திர ரக்ஷணகதை தலைசிறந்ததாதலால் அதனையெடுத்துக் கூறி, அப்பரதேவதையை யன்றி மற்றொரு தேவதையை நான் பாடேனென்று தம் மனவுறுதியை இதனால் வெளியிட்டாராயிற்று. "தென்னா தெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத்து என்னானை யென்னப்ப னெம்பெருமானுளனாக - என்னாவிலின்கவி யானொருவர்க்குங் கொடுக்கிலேன்" என்ற நம்மாழ்வார் பாசுரத்தைப் பின்பற்றிப் பணித்ததிது.* ... ... .... ... *

(அவையடக்கம்)

**ஆழ்வார்கள் செந்தமிழை யாதரித்த வேங்கடமென்**
**தாழ்வான புன்சொல்லுந் தாங்குமால்—ஏழ்பாரும்**
**வெல்லுங் கதிர்மணியும் வெம்பரலுஞ் செஞ்சாந்தும்**
**புல்லும் பொறுத்தமையே போல்.**

| | | | |
|---|---|---|---|
| ஆழ்வார்கள் செம் தமிழை ஆதரித்த வேங்கடம் | ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களை அன்புடனேற்றுக் கொண்ட திருமலையானது | ஏழ் பாரும் வெல்லும் கதிர் மணியும் | ஏழுலகங்களையும் விலையாகக் கொள்ளும்படியான ஒளியையுடைய நவரத்தினங்களையும் |
| | | வெம் பரலும் | வெவ்விய பருக்கைக்கற்களையும் |
| என் தாழ்வு ஆன புன் சொல்லும் தாங்கும் | என்னுடைய இளைய கவிதையையும் ஏற்றுக்கொள்ளத் தட்டில்லை ; (இது எதுபோல வென்னில் ;) | செம் சாந்தும் | சிவந்த சந்தனமரங்களையும் |
| | | புல்லும் | புற்களையும் |
| | | பொறுத்தமையே போல் | (அத்திருமலை தான்) தரிக்கின்ற தன்மை போல. |

**** விலையுயர்ந்த நவரத்தினங்களோ டொப்ப மிக விழிவான பருக்கைக் கற்களையும், சிறந்த சந்தனமரங்களோ டொப்பச் சிறப்பில்லாத புற்களையும் திருமலையானது தன்மீது கொள்ளு மியல்பினதாதலால், அவ்வாறே ஆழ்வார்களின் மிகச்சிறந்த திவ்யஸூக்திகளோ டொப்ப எனது மிகத் தாழ்ந்த பாடல்களையும் அங்கீகரிக்குமென்று துணிந்து யான் இப்பிரபந்தம் பாடத் தொடங்கினேனென்று கூறும் முகத்தால் அவையடக்கமென்னும் நைச்சியாநு ஸந்தானத்தைச் செய்தாராயிற்று.* ... .... ... .... .... .... *

நூல் தொடக்கம்

1. பொன்னும் மணியும் பொலிந்தோங்கிப் பார்மகட்கு
மின்னு மணிமுடியாம் வேங்கடமே—மன்னும்
பரமபத நாட்டினன் பையரவின் சூட்டிற்
சிரமபத நாட்டினன் சேர்வு.

| | | | |
|---|---|---|---|
| பொன்னும் மணியும் பொலிந்து ஓங்கி | நவரத்தினங்களும் தன்மீது விளங்கப் பெற்றுத் தான் உயர்ந்திருத்தலால் | மன்னும் பரம பதம் நாட்டினன் | நித்திய விபூதியாகிய பரம பதத்தை நாடாக வுடைய வனும் |
| பார் மகட்கு | பூமிப்பிராட்டிக்கு | பை அரவின் சூட்டில் | படமெடுத்த காளிய நாகத்தின் முடியிலே |
| மின்னும் மணி முடி ஆம் வேங்கடம் | ஜ்வலிக்கின்ற ரத்தன கிரீடம் போலிருக்கின்ற திருமலை யானது, | சிரம பதம் நாட்டினன் | நடனப் பயிற்சியையுடைய திருவடிகளை நாட்டினவனு மான திருமால் |
| | | சேர்வு | திருவுள்ளமுவந்து வந்திருக்கு மிடமாம். |

**** இந்நூலில் முடிவுவரையில் ஒவ்வொரு பாட்டிலும் இரண்டாமடியின் மூன்றுவது சீர் வேங்கடமே என்று வந்து, அது பாட்டின் முடிவிலுள்ள சொல்லோடு அந்வயிக்கும் என்பது குறிக்கொள்ளத்தக்கது. 'வேங்கடமே சேர்வு'—'வேங்கடமே சிலம்பு'—'வேங்கடமே சார்பு'—'வேங்கடமே ஊர்'—வேங்கடமே வரை'—'வேங்கடமே வாழ்வு'.......என வருதல் காண்க. ஈற்றடியின் முதற்சீராகிய 'சிரமபதம்' என்னும் வடசொற்றொடர் - சிரமப்பட்ட திருவடியென்னும் பொருளுடைத்து. என்ன சிரமமென்னில், நடனகலைப் பயிற்சியாகிய சிரமம் என்று கொள்ளத்தக்கது: உண்மையில் கண்ணபிரானுடைய திருவடிக்கு நடனகலாப்யாஸ பரிச்ரமமில்லையாதலால் அக்கலைவல்லமையே இங்கு விவக்ஷிதமென்க. "கானகமாமடுவிற் காளியனுச்சியிலே, தூய நடம்பயிலுஞ் சுந்தர!" "காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு, அவன் நீண்முடியைந்திலும் நின்று நடஞ்செய்து" என்ற பெரியாழ்வார் பாசுரங்கள் இங்கு நினைக்கத்தக்கன. செய்யுளின் முடிவில் சேர்வு, சேர்பு என்பன பாட பேதங்கள்; சேருமிட மென்கை. இந்நூல் முழுதும் பாட்டுத்தோறும் மூன்று நான்காமடிகளில் யமகம் [திரிபு] அற்புதமாக அமைந்துள்ளவாறு நோக்கத் தக்கது. அவ்வடிகளின் முதலிரண்டு சீர்களில் முதலெழுத்துமட்டும் வேறுபட்டு மற்ற எழுத்துக்களெல்லா மொத்திருத்தல் காண்க. (சில பாடல்களில் முதலெழுத்து மொத்திருக்கும்) ஒத்திருக்கச் செய்தேயும் பதங்கள் பொருட்குச் சேர விசித்திரமாகப் பிரிதல் கவனிக்கத்தக்கது. இப்பாட்டில் 'பரமபதம் நாட்டினன்' 'சிரமபதம் நாட்டினன்' என்பவற்றில் பதப்பிரிவில் விசேஷமில்லையாயினும் நாட்டினனென்னும் சொல்வடிவத்தில் விசேஷமுண்டு. மூன்றாமடியில் 'நாடு' என்பது பெயர்ச்சொல். இன் - சாரியை. நாட்டை யுடையவனென்றதாம். நான்காமடியில், நாட்டு - பிறவினைப் பகுதி. இன் - இறந்தகால விடைநிலை. நாட்டுதலாகிற செயலைச் செய்தவனென்றதாம். மங்கலச் சொற்களுள் ஒன்றாகிய பொன் என்னுஞ் சொல்லையிட்டு இந்நூல் தொடங்கப்பட்டதனால் மங்கலாசரணமுமாயிற்று.* .... ... .... .... (1)

2. சோதிமதி வந்துதவழ் சோலைமலை யோடிரண்டாய்
மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடமே—போதி
லிருப்பாற் கடலா னிபமூர்ந்தார்க் கெட்டாத்
திருப்பாற் கடலான் சிலம்பு.

| | |
|---|---|
| சோதி மதி வந்து தவழ் சோலை மலையோடு | ஒளி பொருந்திய சந்திரன் வந்து தவழப்பெற்ற [மிக வுயர்ந்த] திருமாலிருஞ்சோலை மலையோடு சேர்ந்து |
| இரண்டு ஆய் | இரண்டாகி |
| மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடம் | பூமிப்பிராட்டியின் இரண்டு திருமுலைகள் போன்றுள்ள திருமலையானது, |
| போதில் இருப்பாற்கு | தாமரைப் பூவிலிருப்பவனான பிரமனுக்கும் |
| அடல் ஆன் இபம் ஊர்ந்தார்க்கு எட்டா | வலிமையையுடைய ரிஷபத்தையும் ஐராவத யானையையும் (முறையே வாஹனமாகக் கொண்டு) ஏறிச் செலுத்துபவரான சிவபிரானுக்கும் தேவேந்திரனுக்கும் எட்டாத |
| திரு பால் கடலான் சிலம்பு | க்ஷீராப்தி சாயியான திருமாலுறையும் மலையாகும். |

*** *"மதிதவழ் குடுமி மாலிருஞ் சோலை" என்று நம்மாழ்வாரும், "சசதரரிங்கணுட்ய சிகம்" என்று கூரத்தாழ்வானு மருளிச்செய்தவற்றை யடியொற்றிச் "சோதிமதி வந்துதவழ்" என்று திருமாலிருஞ்சோலைமலைக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. இது உயர்வுபற்றிய அதிசயோக்தி. "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையு மென்னுமிவையே முலையா வடிவமைந்த" என்ற பெரிய திருமடலை யடியொற்றிச் "சோலைமலை யோடிரண்டாய் மேதினியாள் கொங்கைநிகர் வேங்கடமே" எனப்பட்டது. அங்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்— "மேரு மந்தராதிகளைச் சொல்லாதே திருமலைகளைச் சொல்லுவானென்னென்னில்; முலைகளாகின்றன, காந்தன் விரும்பிவிடாதே படுகாடு கிடக்குமவையாய்த்து; ஸர்வேச்வரன் விரும்பி நித்யவாஸம்பண்ணு மிடங்களிறே இரண்டு திருமலைகளும்" என்றுள்ள ஸ்ரீஸூக்தி இங்கு அநுஸந்தேயம்.*

**போதிலிருப்பான்** - *கமலாஸனனான பிரமதேவன்.* **அடலானூர்ந்தான்** - *ரிஷப வாஹனனான பரமசிவன்.* **இபமூர்ந்தான்** - *ஐராவத வாரண வாஹனனான தேவேந்திரன்.* **இபம்** - *வடசொல்; யானைக்குப் பெயர். "நீண்ட நால்வாய் ஒற்றைக்கை வெண்பகட்டி லொருவன்" என்றார் திருமங்கையாழ்வார் இந்திரனை. இம் மும்மூர்த்திகளுக்கு எட்டாதவன் திருமால். "பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" என்ற திருவாய்மொழியை நினைப்பது.* .... .... ... (2)

3. **மாலைக்கோ லித்திரியும் வையகத்தோர் தம்பிறவி**
**வேலைக்கோர் வங்கமாம் வேங்கடமே—சோலைத்**
**தருமா தரைநட்டான் தண்முல்லை யாயர்**
**தருமா தரைநட்டான் சார்பு.**

| | |
|---|---|
| மாலை கோலி திரியும் வையகத்தோர் தம் | எம்பெருமானை நாடித் திவ்விய தேசயாத்திரை செய்கின்ற நிலவுலகத்தினருடைய |
| பிறவி வேலைக்கு | பிறப்பாகிய கடலுக்கு |
| ஓர் வங்கம் ஆம் வேங்கடம் | ஒரு தோணி போன்ற திருமலையானது, |
| சோலை தரு | (தேவேந்திரனது) நந்தவனமென்னும் பூஞ்சோலையிலிருந்த பாரிஜாத தருவை |
| மா தரை நட்டான் | பெரிய பூமண்டலத்திற் கொணர்ந்து நட்டவனும் |
| தண் முல்லை ஆயர் தரும் மாதரை நட்டான் | குளிர்ச்சியான முல்லை நிலத்தில் வசிக்கின்ற இடையர் பெற்ற பெண்களை விரும்பிக் கூடியவனுமாகிய திருமால் |
| சார்பு | திருவுள்ளமுவந்து சார்ந்திருக்குமிடமாம். |

*** திருமலையானது பக்தர்களது பிறவிப் பெருங்கடலைக் கடத்துவிக்குமது என்பது முன்னடிகளின் கருத்து. கடலில் இறங்கியவர் அக்கடலைக் கடந்து அக்கரை சேர்தற்கு மரக்கலம் கருவியாவது போலப் பிறப்பிறப்பாகிற ஸம்ஸாரத்திலகப்பட்டவர் அதனையொழித்து முத்திபெறுதற்குத் திருவேங்கடம் சாதனமாகுமென்பதை “ஓயு மூப்புப் பிறப்பிறப்புப் பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடம்” என்ற திருவாய்மொழியாலு மறிக. மாலைக் கோலித்திரியும் என்பதற்கு - மயக்கத்தைத் தம்மிடத்திலேகொண்டு அலைந்து திரிகின்ற விஷய ப்ரவணர்களையும் பொருளாகவுரைப்பர். மூன்றாமடியில், தரு - வடசொல்; வ்ருக்ஷம். தரை - ‘தரா’ என்னும் வடசொல் ஐயீறாயிற்று. [நட்டான்] மூன்றாமடியில் நட்டவனென்று பொருள். ஈற்றடியில், நட்புக்கொண்டவனென்று பொருள். ஸத்தியபாமைப் பிராட்டிக்காகச் செய்த பாரிஜாதாபஹரண கதை மூன்றாமடிக்கு உணர்க. காடும் காடுசார்ந்த இடமும் முல்லை நிலமெனப்படும்; திருவாய்ப்பாடி அங்குள்ள தாதலால் முல்லையாயர் எனப்பட்டது. ஆயர்தரு மாதர் என்று நப்பின்னைப்பிராட்டியை மட்டும் சொல்லிற்றாகவுங் கொள்ளலாம். .... ... .... .... .... (3)

4. நாலு திசைமுகமு நண்ணுதலா லொண்கமல
மேலுறலால் வேதாவாம் வேங்கடமே—சாலுறையு
மண்மயக்கந் தேற்றுவித்தான் மாற்றுதல்போ லாரியனால்
உண்மயக்கந் தேற்றுவித்தா னூர்.

| | | | |
|---|---|---|---|
| வேங்கடம் வேதா ஆம் | திருமலையானது பிரமனை யொத்திருக்கும்! (எங்ஙனே யென்னில்; | (ஒண்…றலால்) | சிறந்த தாமரைத் தடாகங்கள் தன்மீது தங்கப் பெற்றிருக்கும். (ஆக இவ்விருவகைகளினால் பிரமனை யொத்திருக்கின்ற திருமலையானது) |
| நாலு திசை முகமும் நண்ணுதலால் | நான்கு திசைகளையும் நோக்கிய நான்கு முகங்கள் பொருந்தியிருப்பன் பிரமன்; | சால் உறையும் மண் மயம் கம் | பாத்திரத்திலே பொருந்திய மண்ணோடு கலந்த நீரை |
| (நாலு…தலால்) | (திருமலையோவென்னில்) நான்கு திசைகளிலுமுள்ளாராலும் விரும்பி வந்து சேவிக்கப்படுகின்றது. | தேற்றுவித்தால் மாற்றுதல் போல் | தேற்றுங் கொட்டையைக் கொண்டு தெளிவிப்பது போல |
| | | ஆரியனால் | ஆசாரியனைக் கொண்டு |
| ஒண் கமலம் மேல் உறலால் | (இன்னமும்) பிரகாசமான தாமரை மலரின் மேல் தோன்றியவன் பிரமன். (திருமலையோவென்னில்;) | உள் மயக்கம் தேற்றுவித்தான் ஊர் | (எனது) மனத்திலிருந்த தடுமாற்றத்தைத் தெளியச் செய்தவனான திருமாலின் வாஸஸ் தானமாகும். |

*** இச் செய்யுளில் திருமலைக்கும் பிரமனுக்கும் ஒற்றுமை கூறப்பட்டது. பிரமன் சதுர்முகனாகையாலே நாற்றிசையையும் நோக்கிய நான்கு முகங்களையுடையவன். திருமலையோவென்னில், நாலு திசை முகமும் நண்ணும்படியாகவுள்ளது. நாற்றிசைகளிலு முள்ளாரும்வந்து நண்ணித் தொழுமிடமென்கை. இன்னமும், பிரமன் ஒண்கமலத்தின் மேலுறைபவன். திருமலையோ வென்னில், ஒண்கமலத் தடாகங்கள் தன்மேலுறையும்படியுள்ளது. கமலத்தின் மீது உறைபவன் என்னும் பொருள்போல, கமலங்கள் தன்மீது உறையப் பெற்றதென்னும் பொருளும் பொருந்தும்படி சொல் தொடை அமைக்கப்பட்டது காண்க. வடமொழியில் இங்ஙனே அமைப்பது சிரமப்படும்; தென்மொழியில் இஃது எளிதாம். மூன்றாமடியில், கம் - ஜலத்திற்கு வாசகமான வடசொல். மண்கலசி மிகக்கலங்கியிருக்கிற நீரைத் தேற்றாங்கொட்டையை யிட்டுத் தெளியச்செய்வது யாவரும் கட்கூடாகக் காணுமதே. ... (4)

5. பாணிபிறை கொன்றை பணிசூடி மானேந்தி
வேணியரனைப்பொருவும் வேங்கடமே—ஆணிநிறப்
பீதாம் பரனார் பிரமர்வா ழண்டங்கள்
மீதாம் பரனார் விருப்பு.

| | |
|---|---|
| வேங்கடம் வேணி பரனை பொருவும் | திருமலையானது சடை முடியையுடைய சிவபெருமானை யொத்திருக்கின்றது. (எங்ஙனமெனின் ;) |
| பாணி பிறை கொன்றை பணி சூடுதலால் மான் ஏந்துதலால் | நீரையும் சந்திரனையும் கொன்றையையும் பாம்பையும் மேற்கொண்டு மானைத் தரித்திருப்பன் சிவபெருமான் ; (திருமலையோவென்னில்) |
| பாணி பிறை... மானேந்தி | திவ்ய தீர்த்தங்களையும் (தன் சிகரத்தின் மீது) சந்திரனையும் கொன்றை மரங்களையும் மான்களையும் கொண்டிருக்கின்றது ; |
| | (ஆக இவ்வகையால் சிவனை யொத்திருக்கின்ற திருமலையானது) |
| ஆணி நிறம் பீத அம்பரனார் | ஆணிப் பொன்னிறத்ததான பீதாம்பரத்தை யணிந்து கொண்டிருப்பவரும் |
| பிரமர் வாழ் அண்டங்கள் மீது ஆம் பரனார் | பிரம தேவர் வாழ்கின்ற அண்டங்களுக்கு மேலாகிய பரமபதத்தி லெழுந்தருளியிருப்பவருமாகிய திருமால் |
| விருப்பு | விரும்பி வர்த்திக்குமிடம். |

*** *இப்பாட்டில் திருமலைக்கும் பரமசிவனுக்கும் ஒற்றுமை கூறப்பட்டது. பாநீயமென்கிற வடசொல் பாணியென விகாரப்பட்டு ஜலத்திற்கு வாசகமாயிற்று. சிவபிரான் கங்காதரக் கடவுளாகையாலே கங்கையாகிற ஜலத்தையேந்தியவன். திருமலை திவ்யதீர்த்தங்களைத் தாங்கியுள்ளது. சிவன் சந்திரமௌலீச்வரனாதலால் சந்திரனை முடியின்மீது கொண்டிருப்பவன். திருமலை சந்திரமண்டலத்தளவும் ஓங்கிய சிகரத்தை யுடைத்தாயிருக்கையாலே சந்திரனை முடிமீது கொண்டிருக்கும். சிவன் கொன்றைமலரைச் சூடியவன்; திருமலை கொன்றைமரங்களையுடையது. சிவன் நாகபூஷணனாகையாலே பாம்பையுடையவன்; திருமலைக்குப் பாம்புடைமை இயல்பு. சிவபெருமான் மானை இடக்கையிலேந்தியவன்; திருமலையில் மான்கள் திரிதல் இயல்பு.* **பணி**—*வடசொல். படமுடைய தென்கை. சிவபிரானுக்கு வேணியுடைமை கூறியதற்கேற்ப வேங்கடத்திற்கு அடர்ந்த வனத்தொகுதியுடைமை கொள்ளத் தக்கது. மூன்றுநான்காமடிகளில், பீதாம்பரனார், மீதாம்பரனார் என்று திரிபுநயம் வைக்கப்பட்டது. பகவானுக்குப் 'பீதாம்பர:' என்றே பெயராதலால் ஆணிநிறப் பீதாம்பரனாராயினர். அவர்தாம் பரமபதத்திலெழுந்தருளிருப்பவராதலாலும், அந்தப் பரமபதம் பிரமர்வாழ்அண்டங்களுக்குமீதாகவுள்ளதனாலும் "பிரமர்வாழ் அண்டங்கள் மீதாம்பரனார்" எனப்பட்டது. 'பிரமர்' என்ற பன்மை பூஜாயாம் பஹுவசன மன்று; வ்யக்திபஹுத்வத்தையே குறிக்குமது; அனந்தங்களான அண்டங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருபிரமனுளனாதலால்.* ... ... (5)

6. மாலாய்ச் சசித்ழுவி வச்சிரமேந் திப்புகர்மா
மேலாய்ப் புரந்தரனும் வேங்கடமே—நாலாய்க்
கிளர்வாகு மந்தரத்தான் கேட்டமரர் வேட்டுத்
தளர்வாகு மந்தரத்தான் சார்பு.

| | |
|---|---|
| வேங்கடம் புரந்தரன் ஆம் | திருமலையானது இந்திரனை யொத்திருக்கும் ; (எங்ஙனமெனின்,) |
| மால் ஆய் சசி தழுவி வச்சிரம் ஏந்தி புகர் மா மேல் ஆய் | இந்திரன் பெருமை தங்கியவனும், இந்திராணியைத் தழுவுபவனும் வஜ்ராயுதத்தைக் கைக்கொண்டிருப்பவனும் புகர்பெற்ற ஐராவதமென்னும் யானை மேலேறி யிருப்பவனுமாவன்; (திருமலையோவென்னில்) |
| மாலாய்.........மேலாய் | பெருமை தங்கியதாயும், சந்திரன் தன்மீது பொருந்தப் பெற்றதாயும் வச்சிர ரத்தினக் கற்களைத் தன்மீது உடையதாயும் யானைகள் தன் மேல் தங்கப்பெற்றதாயு மிருக்கும். (இப்படிப்பட்ட திருமலையானது) |

| | |
|---|---|
| நால் ஆய் கிளர் | நான்காய் விளங்குகின்ற |
| வாகு மந்தரத்தான் | மந்தர மலைபோன்ற பாஹுக்களை யுடையவனும் [சதுர்ப்புஜனென்றபடி] |
| அமரர்கள் கேட்டு வேட்டு | தேவர்கள் தனது சிறப்பைக் கேள்விப்பட்டுக் குதூகலங்கொண்டு [பரம பதத்தின் பெருமையைக் கேட்டு அங்குச் சென்று சேர விரும்பியென்றபடி] |
| தளர்வு ஆகும் அந்தரத்தான் | (தமக்கு அது எளிதிற் கிடைத்திடாமையால் தாம்) தளர்ச்சியடையவேண்டும்படியான பரமபதத்தை யுடையவனுமாகிய பரம புருஷர் |
| சார்பு | நித்திய வாஸஞ் செய்யுமிடம். |

**** இப்பாட்டில் திருமலைக்கும் இந்திரனுக்கும் ஸாம்யம் அமைக்கப்பட்டது.* **[மாலாய்]** *"வாசவனமரர்கோன் மால்முகிலூர்தி" என்ற திவாகர நிகண்டின்படி மாலெனப்படுவனிந்திரன்;* மால் *என்பதற்கு, பெரிது என்னும் பொருளுமுண்டாதலால் திருமலை பலவகைப் பெருமைகளையுடையது.* [சசி தழுவி] *சசீ என்னும் வடசொல் "புலோமஜா சசீந்த்ராணீ" என்ற அமரகோசத்தின்படி இந்திராணியைக் கூறும்; இந்திரன் இந்திராணியைத் தழுவுபவன். சசீஎன்னும் ஆண்பாற் பெயரான வடசொல் சந்திரனுக்கு வாசகமாதலால், திருமலை உன்னதியினால் சந்திரனைத் தழுவியிருக்கும்; இங்கு அதிசயோக்தியென்க.* [வச்சிர மேந்தி] *"வஜ்ரஹஸ்த: புரந்தர:" என்ற வேதவாக்கின்படி இந்திரன் வஜ்ராயுதத்தை யேந்தியிருப்பன்; வச்சிரமென்று ரத்தினக்கற்களுக்கும் பெயராதலால் அவற்றைக் கொண்டிருக்கும் திருமலை.* [புகர்மா மேலாய்] *யானையின் சாதிக்குரிய செம்புள்ளிகளுக்குப்* புகர் *என்று பெயர். அவற்றை உத்தமலக்ஷணமாகக் கொண்டுள்ள ஐராவதயானையை மேற்கொள்ளுமவன் இந்திரன்; திருமலை அத்தகைய யானைகள் தன்மீது திரியப் பெற்றிருக்கும். ஆக இவ்வகைகளினால் புரந்தரனையொத்திருக்கும் வேங்கடம்.*

*மூன்று நான்காமடிகளில், கிளர்வாகு மந்தரத்தான், தளர்வாகு மந்தரத்தான் என்று திரிபுநயம் வைக்கப்பட்டது. பாஹு என்னும் வடசொல்* வாகுவெனத் *திரிந்தது; *ஈரிரண்டு மால்வரைத் தோளம்மானுகையாலே மந்தரமலைபோன்ற நான்கு புஜங்களையுடையவன் எம்பெருமான்.* கேட்டமரர் வேட்டுத் தளர்வாகு மந்தரத்தான்] *தளர்வு ஆகும் அந்தரத்தான் = அந்தரமென்பது ஆகாசம்; பரமாகாசமான பரமபதம்; இதன்பெருமையைக்கேட்ட அமரர்கள் தாங்களும் அங்குச்செல்ல விரும்பித் தங்களுக்கு அது எளிதாகக் கிடைப்பதரிதென்றுணர்ந்து தளர்வை [சோர்வை] அடைகின்றனராம்; அத்தன்மைக்குரிய திருநாட்டை யாள்பவன் பரம புருஷனென்க.* ... .... .... ... ... (6)

7. வள்ளிபுணர்ந் தாறுமுக மன்னிமயின் மேற்கொளலால்
வெள்ளிலைவேல் வேள்போலும் வேங்கடமே—உள்ளினரைத்
தங்கமலப் பார்வையான் தன்னடியார் மேல்வைக்குஞ்
செங்கமலப் பார்வையான் சேர்வு.

| | |
|---|---|
| வெள் இலை வேல் வேள் போலும் வேங்கடம் | வெள்ளிய இலைவடிவமாகிய வேற்படையையுடைய முருகக் கடவுளை யொத்திருக்கும் திருமலை ; (எங்ஙனே யென்னில் ;) |
| வள்ளி புணர்ந்து | வள்ளிநாயகியோடு கூடியும் |
| ஆறு முகம் மன்னி | ஷண்முகனென்ற பெயர்க்குச் சேர ஆறுமுகம் பொருந்தப் பெற்றும் |
| மயில் மேல் கொளலால் | மயிலை வாஹனமாகக் கொண்டு அதன் மேலேறப் பெற்று மிருப்பன் முருகன்; (திருமலையோ வென்னில்) |
| வன்னி... கொளலால் | வள்ளிக்கொடிகள் பொருந்தப் பெற்றும் நதிகள் தன்னிடத்து அமையப்பெற்றும் மயில்களைத் தன்மீது கொள்ளப் பெற்று மிருக்கும் ! |

(இத்தகைய திருமலையானது)

| | |
|---|---|
| உள்ளினரை | தன்னைச் சிந்தனை செய்யுமடியவர்களை |
| மலம் பார் | பலவகையான கல்மஷங்களுக்கிடமான இந்நிலவுலகத்தில் |
| தங்க வையான் | தங்கும்படி வைத்திடாமல் தன் திருவடி வாரத்தில் சேர்த்துக்கொள்பவனும் |
| தன் அடியார் மேல் வைக்கும் செம் கமலம் பார்வையான் | தன்னடியார்களிடத்து வைக்கின்ற செந்தாமரை மலர் போன்ற திருக்கண்ணோக்கத்தை யுடையவனுமான பெருமான் |
| சேர்வு | வந்து சேர்ந்திருக்குமிடமாம். |

**** இச்செய்யுளில் சுப்பிரமணியனுக்கும் திருமலைக்கும் சிலேடை. தேவயானையென்றும் வள்ளியென்றும் இருமனைவியரையுடையவன் கந்தன்; இங்கு வள்ளியோடு புணர்ந்திருப்பனென்றது; திருமலை வல்லிகளோடு [கொடிகளோடு] கூடியிருக்கும். [ஆறுமுகமன்னி] திருமலைக்குக் கொள்ளும்போது ஷண்முகதீர்த்த [குமாரதீர்த்த]த்தோடு கூடியிருத்தலுங் கொள்ளத்தக்கதாம்.* ... ... (7)

8. புள்ளரவ நீரரவம் போர்மா வரவமரு
வெள்ளரவ வெற்பாகும் வேங்கடமே—ஒள்ளரியாய்
மாகனகம் பத்தினார் வாய்கண்கை யுந்திபதம்
கோகனகம் பத்தினார் குன்று.

| | |
|---|---|
| புள் அரவம் | பறவைகளின் ஒலியும் |
| நீர் அரவம் | அருவிநீர் பெருகு மொலியும் |
| போர் மா அரவம் | போர் செய்கின்ற யானை முதலிய விலங்குகளின் ஓசையும் |
| அரு | ஒருகாலும் விட்டு நீங் காத தாய் |
| வெள் அரவம் வெற்பு ஆகும் வேங்கடம் | சுத்தமான சேஷாசல மென்று ஒரு பெயர் பெற்றதான திருவேங்கடம் |
| ஒள் அரி ஆய் | அழகிய நரசிங்கமூர்த்தியாகி |

| | |
|---|---|
| மாகன கம்பத்தினார் | ஓங்கிப் பருத்த தூணினின்று தோன்றியவரும் |
| வாய் கண் கை உந்தி பதம் | வாய் ஒன்றும் கண்களிரண்டும் கைகள் நான்கும் நாபியொன்றும் அடிகளிரண்டுமாகிய |
| கோகனகம் பத்தினார் | பத்துத் தாமரை மலர்களையுடையவருமாகிய பெருமானது. |
| குன்று | திருமலையாகும். |

**** இச்செய்யுளில் கீழ்ப்பாட்டுக்களிற்போலச் சிலேடை யொன்றுமில்லை; பின்னடிகளில் யமகம் ஒரு செய்யுளிலும் குறையுறாது. பரமபதநாதனது கட்டளையின்படி, அவனுக்குப் பலவகைக் கைங்கரியங்களைச் செய்யும் ஆதிசேஷனே இம்மலையுருவானதனாலும், மேருமலையினிடமிருந்து ஆதிசேஷனுடனே வாயுவினால் இம்மலை கொணரப்பட்டதனாலும் இதற்கு சேஷகிரியென்று பெயர்வாய்த்தது. அவரவர்கள் திருமலையென்று பெயர்வைத்துக் கொள்வதுபோலவே சேஷகிரி, சேஷாத்ரி, சேஷாசலமென்றிப்படியும் பெயர்வைத்துக்கொள்வது காண்க. அரவமென்னுஞ்சொல் ஓசையென்னும் பொருளில் ரவ: என்ற வடசொல் திரிபு. பாம்பென்னும் பொருளில்*

தமிழ்ச்சொல். சேஷாசலமென்னுங் காரணத்தினுல் அரவவெற்பான விதனை புள்ள ரவம் முதலிய பலவகைப்பட்ட அரவங்கள் [ஓசைகள்] நிகழ்வதனுல் அரவவெற்பான தாகக் கூறியது சமத்காரம்.

மா கன கம்பத்தினுர்—மிகப்பெரிய கம்பத்தினின்று தோன்றியவரென்கை. கனமென்றது வடசொல்திரிபு. கோகனகம் பத்தினுர்—கோகநதமென்கிற வடசொல் கோகனக மென்ருயிற்று. "ரக்தோத்பலம் கோகநதம்" என்பது வடமொழி நிகண்டு. இலக்கணையால் செந்தாமரையைக் கூறுமித எம்பெருமானது திருமேனி யில் பத்துத் தாமரை மலர்களிருப்பதாகக் கூறினார்; [வாய் கண் கை உந்தி பதம்] வாய் ஒன்று, கண்கள் இரண்டு, கைகள் நான்கு, உந் யொன்று, பதங்களிரண்டு—ஆகப் பத்து. "கை வண்ணம் தாமரை வாய் கமலம் போலும் கண்ணிணையுமரவிந்தம் அடியுமஃதே" என்ற திருநெடுந்தாண்டகப் பாசுரத்தி ல் திருநாபி நீங்கலாக ஒன்பது தாமரைகள் சொல்லப்பட்டன. .... . . .... .... (8)

9. துய்யசெம் பொற்கோயிற் சுடரெறிப்பக் கண முகிழ்த்து
வெய்யவன்தேர் மாவிடறும் வேங்கடமே—ஐயிருநா
ருனமுகப் பாம்பணையா ரானிரைப்பின் னூ வருங்
கானமுகப் பாம்பணையார் காப்பு.

| | | | |
|---|---|---|---|
| துய்ய செம் பொன்கோயில் | மாசற்ற செம்பொன் மயமான திருக்கோயிலானது | ஐ இரு நூறு ஆன முகம் பாம்பு அணை யார் | ஆயிரந் தலைகளையுடைய ஆதி சேஷனைத் திருப்பள்ளி மெத் தையாக வுடையவரும் |
| சுடர் எறிப்ப | காந்தி வீசுதலால் | ஆன் நிரை பின் ஊதி வரும் | பசுக்கூட்டத்தின் பின்னே ஊதிக்கொண்டு வருகின்ற |
| வெய்யவன் தேர் மா | சூரியனது தேரிற் கட்டிய குதிரைகள் | கானம் உகப்பு ஆம் பணை யார் காப்பு | சங்கீதம் (அனைவர்க்கும்) ஆனந் தகரமாம் படியான வேய்ங் குழலை யுடையவருமான திருமால் சேமங்கொண்டி ருக்குமிடமாம், |
| கண் முகிழ்த்து இடறும் வேங் கடம் | கண்கள் மூடப்பெற்று அத னுல் கால் இடறும்படியா யுள்ள திருமலையானது, | | |

*** திருமலையிலுள்ள பொன்மயமான திருக்கோயிலின் பிரகாசம் மிகுதியாக வீசுதலால் சூரியன் தேர்க்குதிரைகள் கண் கூச்சமடைந்து கண் விழிக்கமாட்டாது அம்மலையின் உயர்வினுல் அதில் காலிடறுமென முன்னடிகளில் வருணித்தது அதிசயோக்தி. இதனுல் பொற்கோயிலின் சிறப்பும் மலையின் உயர்வும் வெளியிடப் பட்டதாம்.

ஐயிரு நூருன முகப் பாம்பணையார்—"ஆயிரவாய்ப் பாம்பணைமேல் அறிதுயி லினினிதமர்ந்தோய்" என்ருர் இவர்தாமே திருவரங்கக் கலம்பகத்தில். [ஆனிரைப் பின்னூதி வருங்கானம் உகப்பாம்] "தழைகளுந் தொங்கலுந் ததும்பியெங்குந் தண்ணுமை யெக்கம் மத்தளி தாழ்பீலிக் குழல்களுங் கீதமுமாகி யெங்குங் கோவிந்தன் வருகின்ற கூட்டம்" என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி ஆநிரைப்பின்னே கண்ணபிரான் குழலூதிவரும் ஸங்கீத கானத்தின் ஸர்வஜநாஹ்லாதகரத்வம் கூறப்பட்டதாயிற்று. பணை—மூங்கிலின் பெயர் அதனுலாகுங் குழலுக்குக் கருவியாகு பெயராயிற்று; வட மொழியில் வேணு என்னுஞ்சொல்லும் இத்தகைத்தே கானம்—வடசொல். .... (9)

10. மாண்டுபிறக் குந்துயர்போய் வைகுந்தம் புக்கவரும்
மீண்டுதொழக் காதலிக்கும் வேங்கடமே—பாண்டுமக
னேறிரதப் பாகனார் ஏத்துமடி யார்நாவி
லூறிரதப் பாகனா ரூர்.

| | | | |
|---|---|---|---|
| மாண்டு பிறக்கும் துயர் போய் | இறப்பதும் பிறப்பதுமாகிற ஸம்ஸாரத் தொல்லை தொலைந்து | பாண்டு மகன் ஏறு இரதம் பாகனார் | பாண்டு புத்திரனான அர்ஜுனன் ஏறிய தேரைச் செலுத்தும் சாரதியானவரும் |
| வைகுந்தம் புக்கவரும் | திருநாடு சென்று சேர்ந்த முக்தர்களுங்கூட | ஏத்தும் அடியார் நாவில் ஊறு இரதம் பாகு அனார் | தம்மைத் துதி செய்யுமடியார் நாக்கிலே மேன்மேலும் சுரக்கின்ற ரஸமான சர்க்கரைப் பாகு போன்றவருமாகிய எம்பெருமானது |
| மீண்டு தொழ காதலிக்கும் வேங்கடம் | திரும்பியும் (நிலவுலகத்திலே வந்து பிறந்து) ஸேவிக்க விரும்பும்படியான திருமலையானது, | ஊர் | இருப்பிடமாகும். |

****"நசபுநராவர்த்ததே நச புநராவர்த்ததே" என்று உபநிஷத்திலும், "மாமுபேத்ய து கௌந்தேய! புநர் ஜந்ம ந வித்யதே" என்று பகவத் கீதையிலும், "மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே" என்று திருவாய்மொழியிலும் திருநாடு புக்கவர்க்கு மீட்சியில்லை யென்று தெரிவிக்கப்பட்டிருப்பினும், திருவேங்கட மலையின் சிறப்பையும் திருவேங்கடமுடையானுடைய திருக்குணச் செம்மையையும் நினைத்து மீண்டுவந்து தொழக்காதலித்தலும் வந்து பிறத்தலும் அஸம்பாவிதமன்று.*

*இரத மென்பது மூன்றாமடியில் ரதமென்னும் வடசொல்லின் திரிபு; நான்காமடியில் ரஸமென்னும் வடசொல்லின் திரிபு. அனார்—அன்னார்; ஒத்தவர்களென்கை. "அண்ணிக்கு மமுதூறு மென்னாவுக்கே" என்ற மதுரகவிகள் பாசுரம் நினைப்பது.* (10)

11. கோலியொரு நான்கு குலமறையு நாற்றிசையும்
வேலியென நின்றேத்தும் வேங்கடமே—வாலிதனை
நண்பாவை யாதரித்தான் ஞானமுத லாழ்வார்கள்
வெண்பாவை யாதரித்தான் வெற்பு.

| | | | |
|---|---|---|---|
| ஒரு நான்கு குலம் மறையும் | ஒப்பற்ற சிறப்புள்ள நான்கு வேதங்களும் | வாலி தனை நண்பு ஆவையாது அரித்தான் | வாலியை நண்பனாகக் கொள்ளாமல் ஸம்ஹரித்தவனும் |
| நால் திசையும் வேலி என கோலிநின்று | நான்கு பக்கங்களிலும் வேலி போலச் சூழ்ந்திருந்து | ஞானம் முதலாழ்வார்கள் வெண்பாவை ஆதரித்தான் | மாஞானியரான முதலாழ்வார் மூவருமருளிய வெண்பாவினாலாகிய திவ்வியப் பிரபந்தங்களை அன்போடு ஏற்றுக்கொண்டவனுமான பெருமானுடைய |
| ஏத்தும் வேங்கடம் | துதிக்கப்பெற்ற திருவேங்கடமானது | வெற்பு | திருமலையாம். |

**** திருமலைக்கு வேத ப்ரதிபாத்யத்வமாகிறவொரு சிறப்புமுண்டென்பது முன்னடிகளிற் கூறப்பட்டது.* "குசரோ கிரிஷ்டாஃ" *இத்யாதிகள் காண்க.* நாற்றிசையும் *என்பதற்கு நான்கு திக்கிலுள்ளாரும் என்று பொருள் கொள்ளுதல் சிறவாது.* குலமறை'*யென்றது—சிறந்த வேதமென்றபடி. "வாலியைப் பகைவனாகக்கொண்டு" என்னாமல் 'வாலியை நண்பனாகக் கொள்ளாமல்' என்று கூறியதில்* ஒரு சுவை

புண்டு; ராவண ஸம்ஹாரத்திற்குப் பெருமாள் வாலியை நண்பனாகக் கொண்டிருந்தால் அக்காரியம் மிக வெளிதாக நடைபெற்றிருக்குமே; அதை விட்டு, அவ்வாலியிடம் பங்கப்பட்ட சுக்கிரீவனைத் துணைகொண்டது ஸாமர்த்தியமற்ற செயல் என்று சிலர் நினைப்பதுண்டு; அதனை இங்கு அநுவாதம் செய்வது போன்றுளது. அஸஹாய சூரனென்று பேர் பெற்ற இராகவனுக்கு யாரையும் துணைகொள்ள வேண்டிய அவசியமில்லை; "தீனபந்து—தீனதயாளு" என்னும் விருதுபெறுவதற்கே சுக்கிரீவனிடத்து அன்பு காட்டியருளினனென்பது தத்துவம். "வாலிநி பலோர்மிமாலிநி ஜாக்ரதி ஸுக்ரீமக்ரஹீத் யதயம்; தேந ச்ருதி:த ஸித்தம் ஸுவ்யக்தம் தஸ்ய தீநபந்துத்வம்." என்ற வேங்கடாத்வரி பாஷிதம் இங்கு நினைக்கத்தக்கது.

முதலாழ்வார்கள்—பொய்கையார் பூதத்தார் பேயார்; அவர்களுடைய வெண்பா ஒன்றிரண்டு மூன்று திருவந்தாதிகள். முதலாழ்வார்கள் வெண்பாவை யாதரித்தானென்று கூறியது—திவ்வியப் பிரபந்தங்களெல்லாவற்றையுமாதரித்தமை கூறிய வாறும். நூற்றெட்டுத் திருப்பதிகளுள்ளும் திருமலையை விசேஷித்துக் கூறியது முதலாழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களிலாதலால் அதனைக் கருதிக் கூறியதுமாம். .... .... .... .... .... .... (11)

12. தெள்ளியதோர் வீடருளுஞ் சீர்கேட்டுப் பொன்மலையும்
வெள்ளிமலை யும்பணியும் வேங்கடமே— புள்ளின்
கொடிவாக னத்தான் குளிர்ந்திருண்ட காரின்
வடிவாக னத்தான் வரை.

| | | | |
|---|---|---|---|
| தெள்ளியது ஓர் வீடு அருளும் சீர், கேட்டு | தெளிந்த நாடாகிய பரமபதத்தை யருளுஞ் சிறப்பு உள்ளதென்னும் பெருமையைக் கேள்விப்பட்டு | புள்ளின் கொடி வாகன தான் | பக்ஷி ராஜனாகிய கருடனது வடிவமெழுதிய கொடியையும் அக்கருடனாகிய வாகனத்தையு முடையவனும் |
| | | குளிர்ந்து இருண்ட காரின் வடிவு ஆகன் | குளிர்ந்த காள மேகத்தின் வடிவம் போன்ற திருமேனியை யுடையவனும் |
| பொன் மலையும் வெள்ளி மலையும் பணியும் வேங்கடம் | மேரு கிரியும் கைலாஸ கிரியும் வணங்கப்பெற்ற வேங்கடமானது. | நத்தான் | திருச்சங்கை யுடையவனுமாகிய திருமாலினது |
| | | வரை | திருமலையாம். |

*** பொன்மலையும் வெள்ளிமலையும் திருவேங்கடத்தைப் பணிவதாக இங்குக் கூறியது அவ்விருமலைகளிற் காட்டிலும் இது மிகச்சிறந்த தென்பதைக் காட்டி நிற்கும் அவற்றுக்குப் பொன்னும் வெள்ளியாய் இருக்கும் பெருமையிருப்பினும் பரமபத மளிக்கும் பெருமை இலதாதலால் அவை தாழ்வானவையே யென்பது முதலடியில் தெரிவிக்கப்பட்டது.

ஆகம்—மேனி; அதனையுடையவன் ஆகன். நத்தான்—நத்து என்று சங்குக்குப் பெயர். .... .... .... .... .... (12)

13. எப்பூ தலமு மீறைஞ்சித் திசைநோக்கி
மெய்ப்பூ சனைபுரியும் வேங்கடமே—கொப்பூ
ழிலகுமுண்ட கந்தரத்தா னின்றளிக்கு மீரே
ழுலகுமுண்ட கந்தரத்தா னூர்.

| | | | |
|---|---|---|---|
| எ பூதலமும் | பூ மண்டலத்திலுள்ளா ரெல்லாரும் | கொப்பூழ் இலகும் முண்டகம் தர | திருநாபியில் தோன்றி விளங்கிய தாமரை மலர் அளிக்க |
| திசை நோக்கி இறைஞ்சி | திக்கு நோக்கி வணங்கி | தான் ஈன்று அளிக்கும் | தான் பெற்றுப் பாதுகாக்கிற |
| | | ஈரேழ் உலகும் | பதினான்கு லோகங்களையும் |
| மெய் பூசனை புரியும் வேங்கடம் | உண்மையான ஆராதனையைச் செய்யப் பெற்ற திருமலையானது. | உண்ட கந்தரத்தான் ஊர் | அமுது செய்த கண்டத்தையுடைய திருமாலின் இருப்பிடம். |

*** *திக்கு நோக்கித் தெண்டன் ஸமர்ப்பித்தல் என்பது மிக்க மேன்மையை விளக்கும். முண்டகம்—தாமரை. ஈரேழுலகங்களையும் திருநாபிக்கமலம் தந்ததாகக் கூறினது ஔபசாரிகம்; "நாட்டைப் படையென்றயன் முதலாத்தந்த நளிர் மாமலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன்" என்பது நாச்சியார் திருமொழி. ஈற்றடியில், கந்தரம்—கழுத்து; வடசொல்விகாரம்.* .... .... .... (13)

14. நோவினையு நோயினையும் நோய்செய் வினையினையும்
வீவினையுந் தீர்த்தருளும் வேங்கடமே—மூவினைசெய்
மூவடிவாய்ப் பச்சென்றாள் முன்னா ளகலிகைக்குச்
சேவடிவாய்ப் பச்சென்றான் சேர்பு.

| | | | |
|---|---|---|---|
| நோவினையும் | ஜன்ம ஸங்கடத்தையும் | மூ வடிவு ஆய் | திரிமூர்த்திகளின் வடிவமாய் (அவற்றுள் தானான வடிவத்தில்) |
| நோயினையும் | வியாதிகளையும் | | |
| வீவினையும் | மரண வேதனையையும் | | |
| நோய் செய் வினையினையும் | ஸகலவித துன்பங்களுக்குங் காரணமான கருமங்களையும் | பச்சென்றான் | பசுமை நிறத்தையுடையவனும் |
| | | முன் நாள் | முற்காலத்தில் |
| | | அகலிகைக்கு | அஹல்யைக்கு |
| தீர்த்து அருளும் வேங்கடம் | தொலைத்தருளவல்ல திருமலையானது. | சே அடி வாய்ப்ப | சிவந்த தனது திருவடி சித்தியளிக்கும்படி |
| மூ வினை செய் | ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களாகிற மூன்று காரியங்களையுஞ் செய்கின்ற | சென்றான் | நடந்தருளியவனுமாகிய திருமால் |
| | | சேர்பு | சேருமிடமாம். |

*** *பிறக்குங் காலத்தும், வளர்ந்து உயிர் வாழுங்காலத்தும், இறக்குங்காலத்தும் உண்டாகிற பலவகைத் துன்பங்களும், அவற்றுக்கெல்லாம் காரணமான கருமங்களும் தன்னையடைந்தார்க்கு இனி யில்லையாம்படி தன் மஹிமையினாற் செய்யுந் தரத்தது திருமலை-என்பது முன்னடிகளின் கருத்து. இனி,* நோவு - *மனோவியாதி;* நோய் - தேஹ*வியாதி என்றுரைத்தலுமாம்.* நோய்செய்வினை *யென்றதில்* நோய் *என்றது - பசி தாகம் பயம் கோபம் முதுமை துன்பம் முதலிய பலவகையுடற் குற்றங்களையும் பொதுப் படவுணர்த்தும்.* (மூவினை செய் மூவடிவாய்) *ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களாகிற முத்தொழில்களையும் நடத்த ஸ்ரீமந் நாராயணனொருவனே த்ரிமூர்த்திகளின் வடிவாக நிற்பதாய் நூற்கொள்கை. "ஒருருவம் பொன்னுருவ மொன்று செந்தீ ஒன்றுமாகடலுருவம்" என்று திருநெடுந்தாண்டகத்தில் திருமங்கையாழ்வாரருளியபடி தானான வடிவத்தில் பசுமை நிறத்தையுடையவனென்று காட்டும்* பச்சென்றானென்பது. *அகலிகைக்குச் சேவடிவாய்ப்பச் சென்றது - ஸ்ரீராமாயண பால காண்டப்ரஸித்தம்.* (14)

15. பித்துமல டூமைமுடம் பேய்குருடு கூன்செவிடு
மெய்த்துயர்நோய் தீர்த்தருளும் வேங்கடமே—பத்தருக்கு
வந்ததுக்கங் காப்பான் மலருந் தியினுலகம்
தந்ததுக்கங் காப்பான் தலம்.

| | | | |
|---|---|---|---|
| பித்து மலடு ஊமை முடம் பேய் குருடு கூன் செவிடு | பைத்தியம், மலடு, ஊமைத்தனம், கைகால்களின் குறை. பேய் பிடித்தல், கண் தெரியாமை, கூன் செவிடு ஆகிய | பத்தருக்கு வந்த துக்கம் காப்பான் | பக்தர்களுக்கு நேரும் துக்கங்களை நீக்கி அவர்களைப் பாது காப்பவனும் |
| | | மலர் உந்தியின் | தனது நாபித்தாமரையினின்று |
| | | உலகம் தந்து | உலகத்தை யுண்டாக்கி |
| மெய் துயர் நோய் | உடற் குற்றங்களையும் மற்றும் வருத்தத்தைத் தருகின்ற வியாதிகளையும் | அதுக்கு | (ஒரு காலத்தில்) அதை உண்ணும் பொருட்டு |
| தீர்த்து அருளும் வேங்கடம் | (தன்னை யடைந்தவர்களுக்கு) நீக்கியருளவல்ல வேங்கடமானது. | அங்காப்பான் | வாய் திறப்பவனுமாகிய திருமாலினது |
| | | தலம் | இடமாகும். |

**** "ஒயு மூப்புப் பிறப்பிறப்புப்பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்தாயன்" என்ற திருவாய்மொழியில் திருவேங்கடமுடையானுக்குச் சொன்ன பெருமை திருமலைக்கு முள்ளதாதலால் அத்திருமலையினது வரப்ரஸாத சக்தி முன்னடிகளில் விளக்கப்பட்டது. மூன்றாமடியில்,* மலருந்தியின் *என்றதை 'உந்திமலரின்' என்று மாற்றிக் கொள்க. "செஞ்சுடரும் நிலனும் பொங்கார் கடலும் பொருப்பும் நெருப்பும் நெருக்கிப் புகப் பொன்மிடறு அத்தனை போது அங்காந்தவன்" என்ற பெரிய திருமொழிப்பாசுரம் ஈற்றடிக்கு நினைக்கத்தக்கது.* ... .... ... (15)

16. வாடப் பசித்த வரியுழுவை வானோக்கி
மேடத்தைப் பார்த்திருக்கும் வேங்கடமே—கூடத்துக்
கம்பவள மாவென்றான் காசினிக்கும் வெண்ணெய்க்குஞ்
செம்பவள மாவென்றான் சேர்வு.

| | | | |
|---|---|---|---|
| வாட பசித்த வரி உழுவை | வாட்ட முண்டாம்படி பசியடைந்தவையும் உடலில் கோடுகளையுடையனவுமான புலிகள் | கம்பம் வளம் மா வென்றான் | தறியிற் கட்டிவைக்கத் தக்க, மதக்கொழுமையையுடைய குவலயாபீட யானையைக் கொன்று வெற்றி பெற்றவனும் |
| வான் நோக்கி | ஆகாசத்தைப் பார்த்து | | |
| மேடத்தை பார்த்து | (அங்கு ஆடுவடிவமான மேஷ ராசியைக் கண்டு | காசினிக்கும் வெண்ணெய்க்கும் செம்பவளம் ஆ என்றான் | (பிரளய காலத்தில்) உலகத்தை யுண்ணுதற்காகவும் (திருவாய்ப் பாடியில்) வெண்ணெயை அமுது செய்வதற்காகவும் சிவந்த பவழம் போன்ற திருவாய் மலரை ஆவென்று திறந்தவனுமாகிய திருமால் |
| இருக்கும் | அடுத்துவரும் விருஷபராசியை எதிர் நோக்கிக் கொண்டிருக்குமிடமான | | |
| வேங்கடம் | திருமலையானது, | | |
| கூடத்து | யானைச் சாலையில் | சேர்வு | சேர்ந்திருக்குமிடமாம். |

**** திருமலையின் ஓக்கத்தைத் தெரிவிப்பதற்கான அதிசயோக்தி இனிமேற் பல செய்யுள்களில் அமைக்கப்படுகின்றது. மேஷம் விருஷபம் மிதுனம் முதலிய ராசிகளுள்ளவிடமான ஆகாசத்தளவும் ஓங்கியது திருமலை என்று காட்டுவதில் முடிந்து நிற்கும். இப்பாட்டின் இரண்டாமடியில் "மேடத்தைப் பார்த்துறக்கும் வேங்கடமே" என்னும் பாடமே உலகம் பரவியுள்ளது. அது சிறவாதென்று கொண்டு*

"மேடத்தைப் பார்த்திருக்கும்" என்னும் பாடத்தையே மேலையோர் ஆதரிப்பர்கள். 'மேடத்தைப் பார்த்து உறுக்கும்' என்ற பாடத்திற்கு - வானத்திற் செல்லுகின்ற ஆட்டின் வடிவயான மேஷராசியைப் பார்த்து அந்த ஆட்டைக் கொன்று தின்னக் கருதிச் சீறுகின்றது புலி என்று பொருளாகும். புலிக்கு ஆடு ருசிகரமான உணவன்று; விருஷபந்தான் அதற்கு உற்ற உணவு; ஆகவே, மேடத்தைப் பார்த்து உறுக்கு மென்பதைவிட, தனது ஆகாரத்திற்கும் வலிமைக்கும் தகுந்ததாகிய விருஷபம் [ராசி] அடுத்து வருமென்று அதனை எதிர்நோக்கி மேஷத்தையுபேக்ஷித்திருக்கு மென்ற பொருள் சுவை மிக்கதாதலால் "மேடத்தைப் பார்த்திருக்கும்" என்ற பாடமே சிறக்கு மென்க. "ஓடி மீனோடவுறுமீன் வருமளவும் வாடியிருக்கு மாங் கொக்கு" என்றதை நினைப்பது. முதலடியின் முடிவில் "வாலாட்டி, வானோக்கி" என்பன பாடபேதங்கள். வாலாட்டுதல் கோபக் குறியாம்.

[கூடத்துக் கம்ப வள மா வென்றோன்] கண்ணபிரான் திருவாய்ப்பாடியினின்று மதுரைக் கெழுந்தருளினபோது அங்குக் கம்ஸவதத்திற்குப் பூருவாங்கமாகக் குவலயாபீட மத யானையை முடித்த வரலாறு அறிக. [காசினிக்கும் வெண்ணெய்க்கும் செம்பவளம் ஆவென்றோன்] பெரிய திருமொழி—பதினோராம்பத்தில் இரு தோழியரின் ஸம்வாதமாக அமைத்த *மானமரு மென்னோக்கிப் பதிகத்தில் "ஆழ்கடல் சூழ்வையகத்தார் ஏசப் போய், ஆய்ப்பாடித் தாழ்குழலார் வைத்த தயிருண்டான் காணேடீ" என்று ஒரு தோழி இழிவாகக் கூற, அதற்கு மற்றொரு தோழி "தாழ்குழலார் வைத்த தயிருண்ட பொன் வயிறு, இவ்வேழுலகு முண்டு மிட முடைத்தால் சாழலே" என்றதும், அதற்கடுத்தபாட்டில் "உறியார் நறுவெண்ணெயுண்டுகந்தான் காணேடீ" என்றதற்கு "உறியார் நறு வெண்ணெ யுண்டுகந்த பொன் வயிற்றுக்கு ஏறி நீருலகனைத்து மெய்தாதால் சாழலே" என்றதும், இங்கு அநுஸந்திக்க வுரியன. காசினிக்கு வாய் திறப்பவனன்பதனால் பரத்துவமும், வெண்ணெய்க்கு வாய்திறப்பவனென்பதனால் ஸௌலப்யமும் வெளியிடப்பட்டதாம். .... .... .... (16)

17. தாவிவரும் வானரங்கள் தண்குவட்டிற் கற்கடகம்
மேவிவரக் கண்டோடும் வேங்கடமே—காவிரிசூழ்
பொற்றிருவ ரங்கத்தான் போதன் சிவனென்னும்
மற்றிருவ ரங்கத்தான் வாழ்வு.

| | | | |
|---|---|---|---|
| தாவி வரும் வானரங்கள் | தாவிக்கொண்டே வருகின்ற குரங்குகள் | காவிரி சூழ் பொன் திரு அரங்கத்தான் | காவேரி நதி சூழ்ந்த அழகிய திருவரங்கந் திருப்பதியிலெழுந்தருளியிருப்பவனும் |
| தண் குவட்டில் | குளிர்ச்சியான சிகரத்தில் | | |
| கற்கடகம் மேவி வர கண்டு | நண்டு வடிவமான கற்கடக ராசி பொருந்திவர (அதனைப்) பார்த்து | போதன் சிவன் என்னும் மற்று இருவர் அங்கத்தான் வாழ்வு | பிரமன் சிவனென்கிற மற்றையிருவரையும் தனது அங்கத்திலுடையவனுமாகிய திருமால் வாழுமிடமாம். |
| ஓடும் வேங்கடம் | (அக்குரங்குகள்) அஞ்சியோடுதற்கிடமான திருமலையானது, | | |

***—ஆடி மாதத்திற்குரிய கர்க்கடகராசியானது நண்டின் வடிவமாயிருக்கும். அது சாதாரண நண்டாகவன்றிக்கே மிகப் பெரிய நண்டாயிருக்குமாதலால் அதனைக் கண்டு வானரங்கள் அஞ்சியோடுகின்றனவாம். மூலத்தில் அஞ்சியோடு மென்றில்லாமல் 'கண்டோடு' மென்று மட்டுமே யுள்ளதனால் நண்டைப் பிடித்து உண்பதற்காக வோடு மென்றுரைக்கலாமென்பாருமுளர். கர்க்கடகம்—வடசொல். கடக மென்று வழங்குவது பிழை. போதன்-போதில் [கமலப்பூவில்] பிறந்தவன் பிரமன். "ஏருளு மிறையோனும் திசை முகனும்.......கூருளுந் தனியுடம்பன்" என்ற திருவாய்மொழி காண்க. .... ... ... .... ... (17)